

தமிழ்

# எக்ஸ்பிரஸ்

வட அமெரிக்கத் தமிழர்களின் குரல்!

அக்டோபர் 2018
தமிழ் மாத இதழ்

"என்னை எழுத்தாளர் என்று சொல்லாதீர்கள்"
– மனம் திறக்கும் ஜோ.டி.குரூஸ்

"ஆன்மிகத்தையும், அரசியலையும் ஒப்பிட வேண்டிய அவசியம் இல்லை"
– சுகி சிவம்

"வீடியோ" போர்

# பாரத்தை இறக்குபவன் கண்ணன்!

ஒரு நாள், ஒரு கிணறு அருகில், ஒரு கோபிகை ஸ்த்ரீ, தண்ணீர் குடத்தை யாராவது தூக்கிவிடுவார்களா என, எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தாள். அப்போது, அங்கே சிறுவனான ஸ்ரீகிருஷ்ணன், வந்து கொண்டிருந்தான். கிருஷ்ணனைப் பார்த்த அந்த கோபிகை தண்ணீர் குடத்தை தூக்குவதற்காக, அவனை கூப்பிட்டாள். ஆனால் கிருஷ்ணனோ, கூப்பிட்ட குரல் கேட்காதது போல சிறிதும் கவனிக்காமல் போய்க்கொண்டிருந்தான். கோபிகைக்கோ கிருஷ்ணனை கூப்பிட்டு கூப்பிட்டு, தொண்டை வறண்டு விட்டது. கிருஷ்ணனோ, திரும்பிக்கூட பாராமல் போய்விட்டான்.



ஒருவழியாக, கோபிகை நீர் நிறைந்த குடத்தை, தலையில் சுமந்தபடி, தன் வீடு நோக்கி நடக்க ஆரம்பித்தாள். தன் வீடு வந்தவள் அதிர்ந்தாள். அங்கே ஸ்ரீகிருஷ்ணன், அவள் வீட்டு வாசலில் அவளுக்காக காத்திருந்தான்.

கோபிகை வாசல் அருகே வந்ததும், தானே முன்வந்து நீர் நிறைந்த குடத்தை கீழே இறக்கி வைத்தான்.

உடனே கோபிகை, "கிருஷ்ணா குடத்தை தூக்குவதற்காக உன்னை அழைத்தபோது, நீ திரும்பிகூட பாராமல் சென்றுவிட்டாய். ஆனால், இப்போது கூப்பிடாமல் குடத்தை இறக்கி உதவி செய்தாயே ஏன்" என்று கேட்டாள்.

அதற்கு ஸ்ரீகிருஷ்ணன், தன் மந்தகாச இனிமையான புன்சிரிப்போடு, மெதுவாக கோபிகையிடம் இப்படி கூறினான்.

"நான் பாரத்தை இறக்கி வைப்பவன், ஏற்றுபவனல்ல. எல்லோரையும் உயர்ந்த நிலைக்கு ஏற்றி விடுவது தான், என் வேலை. உயர்ந்த நிலையில் இருந்து, தாழ்ந்த நிலைக்கு இறக்கி விடுவது என் வேலை அல்ல" என்றான் கண்ணன்.

"கண்ணா, உண்மையில் நீ யார்?" என்றாள் கோபிகை.

'இதைத் தெரிந்து கொள்ளத் தான் வேதங்களும் உபநிடதங்களும் சாஸ்திரங்களும் என்னை ஆராய்கின்றன. இதை, இவ்வளவு சுலபமாகக் கேட்கிறாளே இவள்!' என்று நினைத்த கண்ணன், சிரித்தபடி அங்கிருந்து சென்றான்.

எதை அடைந்தால், எல்லாவற்றையும் அடைந்ததாகுமோ, எதை உணர்ந்தால் எல்லாவற்றையும் உணர்ந்ததாகுமோ எதைப் பிடித்தால் மீண்டும் வேறு எதையும் பற்றுக் கொள்ள வேண்டியதில்லையோ, அந்த ஒன்று ஸ்ரீ கிருஷ்ணரின் திருவடிதான்.

பகவானை விட, அவன் நாமம் பெரிது. அந்த நாமத்தை உச்சரிக்கும் அவன் அடியார்கள் பெரியவர்கள். ஞான மார்க்கத்தை விட, உயர்ந்ததும் பல படிகள் எளியதுமாக இருப்பது, பகவானின் நாமத்தை சதா உச்சரித்துக் கொண்டிருக்கும், பக்தி மார்க்கம்தான் என்பது ஆன்றோர்கள் வாக்கு.

இறைவனின் நாமம் கூறித் துதிப்போம். அதுவே நமது பாவங்களைப் பொசுக்கும் நல் அக்னி. அது ஒன்றே நம் பிறவிக் கடல் நீந்த உதவும் தோணி.

●

8K தமிழ் எக்ஸ்பிரஸ்
வட அமெரிக்கத் தமிழர்களின் குரல்!

Volume : 4 Issue : 4 October 2018



# பிரதமர் மோடி எனக்கு வழங்கிய ஆலோசனைகள்





## தேசிய விருது ஆசிரியை லதி





# வெள்ளையர்களை அழகாக்கும் தமிழர்


Dr. Jeya Prakash

விதிகள் மாற்றப்படும் போது, தீர்ப்புகள் திருத்தப்படும் போது, உடலின் அழகு மட்டும் விதிவிலக்கா என்ன? விதியை மாற்றி எழுதுவது, கலைஞர்களின் இயல்பு. உடலின் விதியை மாற்றி எழுதுவதில், டாக்டர்களும் கலைஞர்களே. ஆள் பாதி; ஆடை பாதி என்பது நம் மூளையில் பதிந்த வாசகம். அழகும் பாதி என்பது நடைமுறை யதார்த்தம்.

வீதியில் பேரழகி நடந்து சென்றால், திரும்பிப் பார்க்காதவர்கள் தான் யார்? தோற்றம் கொடுக்கும் பொழிவுக்கு ஈடு இணை இங்கு இல்லை. அது உள்ளுக்குள் இருக்கும் தன்னம்பிக்கையை அடர்த்தியாக்கும். எங்கும் எதிலும் தலைநிமிர்த்தி உயர்த்த வைக்கும். உலகம் முழுக்க அழகு குறித்த விழிப்புணர்வு வந்திருக்கிறது.

படைக்கப்பட்ட படைப்பை மாற்றிப் படைக்கும் ஆற்றலை மருத்துவத்துறை செய்து வருகிறது. அந்த வகையில் உலக நாடுகள் அழகுக்கலையில் புதுப்புது மாற்றங்களை செய்து வரும் நிலையில், நம் தமிழர் ஒருவர் ஆங்கிலேயர்களை எல்லாம் அழகாக்கி வருகிறார்.

டாக்டர் ஜெயபிரகாஷ், சிவகாசியில் பிறந்து வளர்ந்து, இன்று லண்டனில் வெற்றிக்கொடி நாட்டிய தமிழர். இங்கிலாந்தின் புகழ்பெற்ற அழகுக்கலை அறுவை சிகிச்சை டாக்டர்களில் முக்கியமானவர். பாதி நாட்கள் இங்கிலாந்திலும், பாதி நாட்கள் இந்தியாவிலும் பறந்து கொண்டிருக்கும் அவர், அழகுக்கலை குறித்த பல்வேறுத் திட்டங்களை தமிழர்களுக்கு அறிமுகப்படுத்துகிறார்.

இவருடைய 'மெடிக்கல் பார்க்' என்ற மருத்துவ நிறுவனம், பொழியும் அழகில் நம்மை மேலும் மகிழ்வூட்டுகிறது. அவரே விவரிக்கிறார்...



- **முதலில் கவர்வது முகம் தான். அழகுக் கலையில் முகத்துக்கு கொடுக்கும் கூடுதல் முக்கியத்துவ சிகிச்சைகள் என்ன?**

ஒரு மனிதரை பார்த்த அடுத்த நொடி கவர்வது அவருடைய முகம் தான். இது இருபாலருக்கும் பொருந்தும். அகம் அற்புதமாக இருந்தாலும், சிலருக்கு முகம் சிறு சிறு குறைபாடுகளுடன் இருக்கும். அந்த குறைபாடுகளை போக்கி, அழகை கூடுதலாக்கும் சிகிச்சை செய்கிறோம்.

குறிப்பாக, இமைகளை சீராக்குகிறோம். சிலருக்கு கன்னக் கதுப்பு அதிகரித்து தோற்றத்தை கெடுக்கும் வகையில் இருக்கும். அதை முதலில் சீராக்குகிறோம். முகத்தில் உள்ள வடுக்களை அகற்றுகிறோம். காது சீரான முறையில்

## சிறப்பு சலுகைகள்

**பிளாட்டினம் பேக்கேஜ், கோல்டன் பேக்கேஜ், சில்வர் பேக்கேஜ் என்று மூன்று வழிகளில் சிறப்பு பேக்கேஜ்கள் அறிமுகப்படுத்தி இருக்கிறோம். இதில், உங்களுக்குத் தேவையான பேக்கேஜை எடுத்துக் கொண்டால், பல்வேறு சலுகைகள் உண்டு.**

**இது குறித்து அறிய, 'த மெடிக்கல் பார்க், 2, வெஸ்ட் மினிஸ்ட்டர் ஹெல்த் கேர் பில்டிங், 6வது தளம், நுங்கம்பாக்கம் நெடுஞ்சாலை, சென்னை-34 (பார்க் ஹோட்டல் எதிரில்)என்ற முகவரியில் அலுவலகத்துக்கு வரலாம். 97899 86999/ 044 - 43135588, 0789986999 என்ற எண்களிலும் தொடர்பு கொள்ளலாம். மேலும் விவரங்களை, info@themedicalpark.com, www.themedicalpark.com என்ற இணைய முகவரியில் பெறலாம்.**

இல்லாமல் பெரிதாக இருக்கும். அவற்றை முறைப்படுத்துகிறோம். அழகு முகம் இருந்த போதும், பலருக்கு மூக்கு சரியாக இருக்காது.

முகத்துக்கு பொருத்தமான வகையில் மூக்கை மாற்றுகிறோம். இப்படி முகத்தில் எங்கெங்கு சிறு குறைபாடுகள் உள்ளதோ அவை அனைத்தையும் சரி செய்கிறோம். தேவைப்படும் பட்சத்தில் முகம் மாற்று அறுவை சிகிச்சையும் செய்து தருகிறோம்.

- **இங்கிலாந்துக்கு இருக்கும் வயது மேலாண்மை குறித்த புரிதல் இந்தியாவுக்கு இருக்கிறதா?**

பெரும்பாலும் இல்லை என்றே சொல்ல வேண்டும். அந்த விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும் என்பதே என் எண்ணம். ஒவ்வொரு பருவத்துக்கும் ஒரு இயல்பு உண்டு. அந்த இயல்பை உள்வாங்கிக் கொண்டு உடல் அதை வெளிப்படுத்தும். இன்று இளம் வயதினர் பலருக்கும் முதியோர்களுக்கு உரிய முகத்தோற்றம் வந்து விடுகிறது. காரணம், அலைச்சல், மன உளைச்சல். ஹார்மோன்கள் சமநிலையில் இல்லாதது, இதன் அடிப்படைக் காரணம்.

என்னிடம் வரும் பலர், எல்லாவித டெஸ்ட்டுகளும் எடுத்தப் பிறகு எல்லாம் சரியாக இருக்கிறது; ஆனால் பிரச்சனை ஓய்ந்தபாடில்லை என்று வருத்தப்படுவார்கள். ஹார்மோன்கள் சரியாக இல்லை என்றால், உடலின் சமநிலை மாறி விடும். அதனால், உள்ளுக்குள் பல்வேறு குழப்பங்கள் ஏற்படும். அந்தக் குழப்பங்கள், வெவ்வேறு விளைவுகளை ஏற்படுத்தும்.



அதை தவிர்க்க, ஹார்மோன்களை சமநிலைக்கு கொண்டு வரும் சிகிச்சை அளிக்கிறோம். எங்களிடம் ஒருமுறை வந்தால், வாழ்நாள் முழுவதிற்குமான வழிகாட்டலை வழங்குகிறோம். இதை சரியான முறையில் பின்பற்றினால், கண்ணாடி முன் நிற்கும் ஒவ்வொரு நிமிடமும் உங்களுக்கு நீங்களே புதிதாக தோன்றுவீர்கள்.

- **தென்னாசிய நாடுகளில் மார்பக அறுவை சிகிச்சை செய்வது அதிகரித்து வருகிறது தானே?**

உண்மை தான். இந்தியாவிலும் இப்போது அதிகரித்து வருகிறது. பெண்களின் எடுப்பான தோற்றத்துக்கு மார்பகம் மிக முக்கியம். அது குறைந்தாலோ, கூடினாலோ அதன் அழகு கெட்டு விடும். ஹார்மோன்கள் பிரச்சனையால் பல பெண்கள் இப்படியான பிரச்சனைகளை எதிர்கொண்டு வருகின்றனர். திருமணத்துக்கு பிறகும், குழந்தை பெற்ற பிறகும் இது அதிகரிக்கிறது.

நாங்கள் மூன்று விதங்களில் இப்பிரச்சனையை சரி செய்கிறோம். சிறிய மார்பகம் உடையவர்களுக்கு மார்பகத்தின் அளவை கூட்டி, எடுப்பான தோற்றம் கிடைக்கச் செய்கிறோம். பெரிய அளவு கொண்ட மார்பகத்தை, சிறிதாக்கி மிளிரச் செய்கிறோம். அதே போல், சாய்வான மார்பகங்களை நேர் நிமிர்த்தி சக்கர வடிவில் வட்டமாக கொண்டு வருகிறோம். இது, அவர்களை முற்றிலும் புதிய பெண்ணாக மாற்றும்.





- **தென் தமிழகத்தின் குக்கிராமத்தில் இருந்து, நம்மை ஆண்ட இங்கிலாந்து மண்ணில் வெற்றிக்கொடி நாட்டியது எப்படி?**
- **உழைப்பு தான். ஐந்து வயது இருக்கும் போதே, டாக்டராக வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன். அதையே லட்சியமாக நினைத்துப் போராடினேன். ஒரே குறிக்கோள் தான். அது, டாக்டராக வேண்டும். அந்த கனவு என்னை உறங்கவிடாமல் செய்தது. ஆரம்பத்தில் பொருளாதாரப் பிரச்சனைகள் இருந்த போதிலும், எதையும் நினைக்காமல் என் லட்சியத்தில் ஓடினேன்.**
- **மதுரையில் மருத்துவம் படித்தேன். இருந்தாலும், மருத்துவத்தில் அடுத்தடுத்த கட்டத்துக்கு செல்ல வேண்டும் என்று நினைத்தேன். ஓயாத உழைப்பினால் அதை சாத்தியமாக்கினேன். அழகுக்கலை அறுவை சிகிச்சை இந்தியாவில் பெரிய அளவில் அறியப்படாத காலக்கட்டத்தில் அத்துறையை தேர்ந்தெடுத்தேன். அங்கு தொடர்ந்து, 14 ஆண்டுகள் பணிபுரிந்தேன்.**
- **இங்கிலாந்தியர்கள் பெரிதாக யாரையும் பாராட்ட மாட்டார்கள். ஆனால், என் அறுவை சிகிச்சையை பார்த்து அங்குள்ள அனஸ்தீனியா டாக்டர் குட் ஷெப்பர்டு, 'ராணுவ வீரர்களின் அணிவகுப்பு மாதிரி நேர்த்தியாக இருக்கிறது உங்கள் அறுவை சிகிச்சை' என்றார். கடுமையாக உழைத்தால் எதிலும் வெல்லலாம், எங்கும் வெல்லலாம்!**

- அறுவை சிகிச்சையினால் மட்டும் அழகு சிகிச்சை செய்ய முடியுமா?

இல்லை. அறுவை சிகிச்சை இல்லாமலும் அழகைக் கூட்ட முடியும். முகம் இளமையாக இருந்தாலும், பலருக்கு கண்களுக்கு அருகில் சுருக்கம் விழுவது, வயதான தோற்றத்தை ஏற்படுத்தும். இவற்றை அறுவை சிகிச்சை செய்யாமல் மாற்ற முடியும்.

அதுமட்டுமின்றி, தோல்களை ஒளிரச் செய்வது, நிறம் மாற்றுவது, முடிகளை அகற்றுவது, மச்சம் அகற்றுவது, உதட்டை விரிவாக்குவது, முகத்தைச் சமன்நிலைப்படுத்துவது, தழும்புகளை நீக்குவது, மூக்கு துவாரங்களை பெரிதாக்குவது, சிலந்தி நரம்பு பின்னல்ளை சரி செய்வது போன்றவற்றை அறுவை சிகிச்சை இல்லாமல் எளிதில் சரிப்படுத்த முடியும்.

- வெளிநாட்டினருக்கோ வெளிநாடு வாழ் இந்தியருக்கோ சிறப்புத் திட்டங்கள் உள்ளதா?

மெடிக்கல் டூரிசம் என்ற பெயரில் புதிய திட்டத்தை அறிவித்திருக்கிறோம். அழகு கலை தொடர்பான அனைத்து அம்சங்களும் எங்களிடம் உள்ளன. வாடிக்கையாளர்கள் விமான நிலையத்தில் இறங்குவதில் இருந்து சிகிச்சை முடிந்து மீண்டும் விமானம் ஏறுவது வரை அனைத்தையும் நாங்களே ஒருங்கிணைக்கிறோம்.

நீங்கள் எங்கும் எதற்கும் அலைய வேண்டிய அவசியம் இல்லை. அறுவை சிகிச்சை ஓரிடத்திலும், மருந்துகள் ஓரிடத்திலும் வாங்க வேண்டிய அவசியம் இல்லை. எல்லாவற்றையும் நாங்களே பார்த்துக் கொள்கிறோம். எங்களிடம் எல்லா வசதிகளும் கூடிய அறுவை சிகிச்சைக் கூடங்கள் உள்ளன. ●

# பக்தர்களை பரவசப்படுத்திய கான்கார்ட் முருகன் கோயில் திருவிழா

கான்கார்ட் சிவா முருகன் கோவிலில் செப்டம்பர் 1 மற்றும் 2 ஆகிய தேதிகளில் திருவிழா சிறப்பாக நடைபெற்றது. இருநாட்களிலும் நூற்றுக்கணக்கான பக்தர்கள் குடும்பம் குடும்பமாக கோவிலுக்கு வருகை தந்தார்கள்.

கோவிலின் உள்ளே, தெய்வங்கள் பல விதங்களாக, அழகாக அலங்கரிக்கப்பட்டிருந்தன. பக்தர்களின் உடல் நலத்திற்காக "ம்ரிதுஞ்சய ஹோமம் இனிதே நடந்தேறியது. கோவிலின் வெளியே , அதன் சுற்றுப்புறத்தில், பல விதமான கடைகள் வைக்கப்பட்டிருந்தன.

தொழிலதிபர்கள், வணிகர்கள், விற்பனையாளர்கள், மற்றும் ஆலோசகர்கள் தங்கள் பொருட்களின் தரத்தை விளக்கி, அவற்றுடன் சம்பந்தப்பட்ட தகவல்களையும் பகிர்ந்துக்கொண்டனர். திறந்த வெளியில், ஒரு அழகான மேடை அமைத்து, அதில் கலை நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டன. ஆடல், பாடல், கிராமத்திய இசை, போட்டிகள் என்று இரண்டு நாட்களுமே குதூகலமாக அமைந்தன.

கான்கார்ட் நகர நிர்வாகிகளும், அலுவலர்களும் திருவிழாவுக்கு வந்து பெருமை சேர்த்தனர். முருகன் கோயில் கான்கார்ட் நகரத்திற்கு ஒரு பன்னாட்டு, பல மத, பல கலாச்சார அடையாளத்தைத் தரும் என்று அவர்கள் நம்புகின்றனர். கான்கார்ட் நகர காவல்துறை தங்கள் ஒத்துழைப்பை தந்தது மட்டுமில்லாமல், திருவிழாவிற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த குதிரையில் சவாரி செய்து மகிழ்ந்தனர்.

ஒரு திருவிழாவின் நோக்கமே, அப்பகுதியின் மக்களை ஒன்றுதிரட்டி, மகிழ்ச்சியைப் பகிர்ந்துகொள்வதுதான். அவ்வகையில், கான்கார்ட் முருகன் திருவிழா சிறப்பாக நடைபெற்றது. ●







Across 43 restaurants and 5 countries, every dish leaving our kitchen is made with the same love and pride that went into the very first biriyani we first served back in 1957.



■ ரமேஷ் குப்புசாமி

# வளைகுடாப் பகுதி தமிழ் மன்றம் சார்பில் மாணவர்களுக்கு வழிகாட்டுதல் கருத்தரங்கு

**வளைகுடாப் பகுதி தமிழ் மன்றம் சார்பாக, கடந்த செப்டம்பர் 8ம் தேதி அன்று ஃப்ரிமாண்ட்ல் மாணவர்களை கல்லூரிக்கு தயார்படுத்தும் ஆலோசனை மற்றும் வழிகாட்டல் கருத்தரங்கு மிகவும் சிறப்பாக நடைபெற்றது.**

கல்லூரியில் சேரவிருக்கும் இடைநிலை மற்றும் உயர்நிலைப் பள்ளி மாணவர்கள், மற்றும் அவர்களது பெற்றோர்களுக்கு, மேற்படிப்பிற்கான வாய்ப்புகள், பொருளாதார, சமூக மற்றும் மனோரீதியான வழிகாட்டலுக்காக பிரத்யேகமாக இந்த கருத்தரங்கு ஏற்பாடு செய்யபட்டிருந்தது.

வளைகுடாப் பகுதி மாணவர்கள் மற்றும் அவர்களின் குடும்பங்களுக்காக தொடர்ந்து மூன்றாவது ஆண்டாக இந்த கருத்தரங்கை தமிழ் மன்றம் நடத்தி வருகிறது. 2017 ஆம் ஆண்டு கிடைத்த வரவேற்பை அடுத்து, இம்முறை சமூக மேம்பாடு மற்றும் மனரீதியான வழிகாட்டல் பகுதிகளுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டிருந்தது.

நான்கு பிரிவுகளாக நடைபெற்ற இந்த நிகழ்ச்சியின் முதல் பகுதியாக, கல்லூரி நுழைவுத் தேர்வுகளுக்கு பயிற்சி அளிக்கும் Live Tutor நிறுவனர் ஆனந்த் சுப்ரமணியன் , தருண் மற்றும் இந்தியாவில் இருந்து பிரதிநிதிகள் கிறி வகுப்புகள் மற்றும் SAT, ACT போன்ற நுழைவுத்தேர்வுகளுக்கு தயாராகும் மாணவர்களுக்கு, அந்நிறுவனத்தின் தேர்ந்த கல்வி வல்லுநர்கள் அளிக்கும் வழிகாட்டல்கள் குறித்து பகிர்ந்து கொண்டார்.

புகழ்பெற்ற டீனாலஜிஸ்ட் டாக்டர் பெர்த் ஹால்பெர்ட் அவர்களது, பதின் பருவ மாணவர்களின் சமூக மற்றும் உளவியல் ரீதியான மாற்றங்கள் மற்றும் தேவைகள், மாணவர்கள் பதின்ம வயதிலிருந்து இளமைப் பருவத்திற்கு செல்லும் காலகட்டத்தில் பெற்றோரின் பங்கு முதலியவை குறித்த உரை, மாணவர்கள் மற்றும் பெற்றோர் ஆகிய இரு தரப்பினருக்கும் மிகவும் பயனுள்ளதாக அமைந்தது.

அவரது உரையின் சிறப்பாக, வாழ்வில் சில சமயம் தோல்விகளை சந்திப்பது இயல்பான ஒன்றே, தோல்விகள் தான் நம்மை பண்படுத்தி, மிகப் பெரிய வெற்றியை அடைய படிக்கல்லாக அமையும் என்பதை சுவாரசியமான முறையில் எடுத்துரைத்தது குறிப்பிடத்தக்கது.

அதனையடுத்து, Trans America நிறுவனத்தைச் சேர்ந்த நிதி திட்டமிடல் வல்லுநர், கல்லூரி கட்டணம், சேமிப்பு மற்றும் நிதி முதலீடுகளின் அடிப்படையில் கல்வி நிறுவனங்கள் வழங்கும் பல்வேறு கல்வி உதவித்தொகைகள் குறித்து விவரித்தார்.

கருத்தரங்கின் முத்தாய்ப்பாக, மிகுந்த எதிர்பார்ப்பை ஏற்படுத்திய கல்லூரி மாணவர்கள் குழு பங்கேற்ற கலந்துரையாடல் நிகழ்ச்சி நடைபெற்றது. இதில், திறமையான மற்றும் வெற்றிகரமான நான்கு கல்லூரி மாணவர்கள் அனிருத், நிலா, பிரசன்னா மற்றும் ஷிராந்தி, தாங்கள் கல்லூரியில் சேர எடுத்துக் கொண்ட முயற்சிகள் மற்றும் அனுபவங்கள் குறித்து பகிர்ந்து கொண்டனர்.

மாணவர்கள் தன்னம்பிக்கையுடனும், முழுமையான மற்றும் சீரான அனுபவம் மிக்கவர்களாகவும் திகழ உயர்நிலைப் பள்ளிக்கல்வியின் போது செய்ய வேண்டியவை மற்றும் செய்யக் கூடாதவை குறித்த குறிப்புகளை பகிர்ந்து கொண்ட அவர்கள், அப்படிப்பட்ட மாணவர்களைதான் கல்லூரிகளும் விரும்புகின்றன என்றதோடு, அது பின்னாளில் வாழ்வில் வெற்றியடையவும் உறுதுணையாக இருக்கும் என்றும் தெரிவித்தனர்.

பார்வையாளர்களின் ஏகோபித்த வரவேற்பையும், பாராட்டுதல்களையும் பெற்ற இந்த வழிகாட்டல் கருத்தரங்கு, அனைவருக்கும் தமிழ் மன்ற நிர்வாகிகள் சார்பாக நன்றி தெரிவிக்கப்பட்டது. •

அட...!

# இதெல்லாம, கொண்டாடுராங்க!

■ ஷஹாரா சுப்புராஜு

**நமக்குத் தெரிஞ்சது எல்லாம் தீபாவளி, பொங்கல், அதுக்கு அப்புறம் சுதந்திரத்தினம், குடியரசுத் தினம், அன்னையர் தினம், காதலர் தினம், தந்தையர் தினம், ஆண்கள் தினம் போன்றவை தான்.**

இப்ப தேசிய பாய் ப்ரண்ட் டே (National boy friend day)னு கொண்டாடுகிறார்களாம். தேசிய கேர்ள் ப்ரண்ட் தினமும் இருக்கு. ஆனா, அதைப் பற்றி சந்தர்ப்பம் வரும் போது பார்ப்போம்.

தேசிய காதலன் தினம்

தேசிய ஆண் நண்பர் தினம் அல்லது தேசிய காதலன் தினமானது ஒவ்வொரு வருடமும் அக்டோபர் மாத 3ம் தேதி கொண்ட்டப்படுகிறது. அண்மைக் காலங்களில் இந்நாளைக் கொண்டாடுவது அதிகரித்து வருகிறது. இந்த தேசிய காதலன் தினம் எப்போது., யாரால்., தொடங்கப்பட்டது என்று தெரியவில்லை. ஆனால், இந்நாளானது காதலர்கள் மத்தியில் சமீபகாலங்களில் அதிகமாக கொண்டாடப்படுகிறது.

நமது வாழ்க்கைத் துணையாக வரப்போகும் காதலனுக்காக ஒரு சிறப்பு தினத்தை எதற்காகக் கொண்டாடக்கூடாது என்று யாரோ ஒரு புண்ணியவதி மூளையில் உதித்த ஐடியாக இது இருக்கலாம் என்று சொல்கிறார்கள்.

எத்தனை உறவுகள் இருந்தாலும், நமக்கென நாம் தேர்ந்தெடுக்கும் நமது வாழ்க்கைத் துணையானவர்கள் என்றைக்குமே நமக்கு சிறப்பானவர்கள்தான். அவர்கள் மீது நமக்கு இருக்கும் அன்பையும், அவர்கள் மீது நாம்கொண்டிருக்கும் காதலின் ஆழத்தையும் வெளிப்படுத்த இது ஒரு சிறந்த நாளாக இருக்கும் என்பதற்காகத்தான் காதலிகளால் கடைபிடிக்கப்படுகிறது என்கிறார்கள்



**இந்த தேசிய காதலன் தினத்திற்காக, காதலிகளுக்கு சில டிப்ஸ்:**

- இன்றயநாளானது பாய்ப்பிரண்டுகளுக்கான நாள்., அதனால் காதலிகள் அன்றய நாளை தங்களது காதலனுக்காக செலவழிக்க வேண்டும்.
- உங்களது காதலனை மற்றவர்களோடு ஒப்பிடாமல் ஊக்கப்படுத்த வேண்டும்.
- அவர்களிடம் இருக்கும் நேர்மறையான விஷயங்களுக்காக அவர்களை பாராட்டுங்கள்.
- எவ்வளவுக் கோபம் வந்தாலும் அன்றைக்கு மட்டும் கட்டுப்படுத்துக் கொண்டு உங்களுடைய காதலனிடம் அன்பாகவும், பணிவாகவும், நடந்துக்கொள்ள வேண்டும்.
- அன்பாக உணவு சமைத்து அதுவும் டின்னர் சமைத்து பரிமாருங்கள்., அச்சசோ..நல்ல நாள் அதுவும்மா இந்தக் கொடுமையை செய்யனுமானு நெனச்சா, ஏதாவது நல்ல ஹோட்டலுக்கு உங்களது செலவில் ஒரு ரொமான்டிக் டின்னருக்கு அழைத்துச் செல்லுங்கள்.
- உங்கள் காதலனுக்குப் பிடித்த சினிமாவுக்கு அழைத்துச் செல்லுங்கள்.
- சர்ப்ரைஸ்சா ஏதாவது பரிசளிப்பது மேலும் இந்நாளை வருடம் முழுவது இந்நாளை அர்த்தமுடையதாக்கி விடும்.

அவ்ளோதாங்க டிப்ஸ் இந்தக் காதலன் தினத்தை சிறப்பாக கொண்டாடி முடித்திடலாம். இன்னைக்கு ஒரு நாள் நாம கவனிக்கிற கவனிப்புல வருஷம் முழுவதும் அவங்க நம்மை விழுந்து விழுந்து கவனிக்கனும்.

**ஆனா, இந்த விஷயங்களையெல்லாம் பார்க்கும் போது கண்டிப்பா இது ஒரு ஆண்மகனால் கண்டுபிடிக்கப்பட்ட நாளாகத்தான் இருக்குமோனு தோனுது.** ●




# ‘தத்வம்’ நடனப் பள்ளி விழா

**‘தத்வம்’ நடனப் பள்ளியின் நான்காம் ஆண்டு நிறைவு விழா இந்த மாதம் 15ந் தேதி “JCC” அரங்கில் மிகவும் சிறப்பாக நடந்தேறியது.**

‘தத்வம்’ பள்ளியின் நிறுவனர் குரு லாவண்யா பிரபுவின் இறைவணக்கத்துடன் தொடங்கிய இந்த விழாவின் கலை நிகழ்ச்சி “சிருஷ்டி 2018” - அரங்க அமைப்பு, நாட்டிய வடிவமைப்பு, இனிமையான இசை, சிறப்பான நடனம் என அனைத்து அம்சங்களிலும் காண்பவர் மனங்களைக் கொள்ளை கொண்டது.

இரண்டு மணி நேரம் சென்றதே தெரியாமல் கண்ணுக்கும், செவிக்கும் விருந்தாக இருந்தது இந்த கலை நிகழ்சசி. கைகள், கண்கள், கழுத்து, தலை இவற்றின் நடன அசைவுகளையும்,பரதத்திற்கு ஆதாரமாக விளங்கும் அடவுகளையும், அழகான பதங்களையும் சீராகக் கோர்த்து அமைக்கப்பட்டிருந்த விதம், ‘தத்வம்’ பள்ளி வழுவூர் நாட்டிய பாணியை சற்றும் பிறழாமல் பயிற்றுவிப்பதை எடுத்துக் காட்டியது.

தட்டடவு, நாட்டடவு, குதித்தடவு, தீர்மானடவு, கோர்வை அடவு, பாய்ச்சல் அடவு முதலிய பல்வேறு அடவுகளை வழக்கமான ஜதி சொற்கட்டு இல்லாமல், மதுராஷ்டகம், லிங்காஷ்டகம், சிவ பஞ்சாட்சரம், லட்சுமி அஷ்டகம் போன்ற சுலோகங்களுக்கு மிருதங்க இசையுடன் மாணவிகள் ஆடியது புதுமையாகவும், அழகாகவும் இருந்தது. இரு புறங்களிலும் இளநிலை மாணவிகள் அடவுகளை ஆட, நடுவில் மூத்த மாணவியர் அந்தப் பாடல்களுக்கு அபிநயம் செய்து ஆடியது அனைவரையும் கவர்ந்தது.

தொடர்ந்து அலாரிப்பு முதல் தில்லானா வரை மாணவிகள் அனைவரும் ஒன்றையொன்று சிறப்பிக்கும் வகையில் தேர்ந்தெடுக்கப்பட்ட வண்ணங்களில் உடையணிந்து நேர்த்தியாக ஆடினார்கள்.

நாட்டை ராகத்தில் அமைந்த விஷ்ணு கவுத்துவத்தை மூத்த மாணவியருள் ஒருவரான ஹேமா சிறப்பாக ஆடினார்.

அடுத்து, பெரியசாமி தூரனின் ‘கலியுக வரதன்’ பதம். வேலவனின் புகழ்பாடும் இப்பதத்திற்கு நடன அமைப்பு விறுவிறுப்பாகவும் சிறப்பாகவும் அமைந்திருந்தது. அதற்கு ஈடு கொடுத்து, சற்றும் சளைக்காமல் ஆடி, மாணவியர் தங்கள் திறமையை வெளிக்காட்டினர்.

அதனையடுத்து அன்னமய்யாவின் “டோலாயாம்” பதத்தில் திருமலையில் உறையும் வெங்கடேசப் பெருமான், அலர் மேல் மங்கையின் உற்சவ மூர்த்திகள், நாதஸ்வரம், மேளம் முழங்க பல்லக்கில் ஊர்வலமாக எழுந்தருளும் காட்சியை மாணவிகள் அற்புதமாக நம் கண்முன் கொண்டு வந்தார்கள்.

அடுத்ததாக, மஹா கிருஷ்ணனின் இனிமையான குரலில் ஹிந்தோள ராகத்தில் அமைந்த தில்லானாவுக்கு மூத்த மாணவிகளின் நடனம். அருமை. நடனம் ஆடுபவரின் திறமைக்கு சவாலாக அமைவது தில்லானா என்றால் மிகை இல்லை. கடினமான ஜதிக் கோர்வைகளுக்கு மாணவிகள் அழகாக ஒருங்கிணைந்து ஆடினார்கள்.

இதனையடுத்து ஒளிபரப்பப்பட்ட காணொளியில் தத்வம் பள்ளியில் ரூபாராணி நடத்தும் யோகா பயிற்சி வகுப்புகளை காணமுடிந்தது. விரும்புவர்கள் இந்த வகுப்பில் சேர்ந்து பயன்பெற இது பெரிதும் உதவுகிறது. நடனத்துடன் யோகா பயிற்சியுடன் சேர்ந்து தன் மாணவிகள் சிறந்து விளங்க ஊக்கம் அளிக்கிறது. ‘தத்வம்’. குரு. லாவண்யா பிரபு தனது உரையில், ‘தத்வம்’ நடனப்பள்ளியில் மாணவிகளுக்கு நடன அசைவுகள் மட்டுமின்றி அவற்றின் பொருள், அபிநயங்களின் பல்வேறு பரிமாணங்கள் முதலியவற்றை விரிவாக விளக்கி பயிற்சி அளிக்கப்படுவதாக கூறினார்.

மூத்த நாடக இயக்குநர்/நடிகர் அனந்தா அய்யர், நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கி, மாணவிகளுக்குப் பரிசளித்து விழாவைச் சிறப்பித்தார்.

வழுவூர் பாணியில் இருந்து சற்றும் வழுவாமல், சிறப்பான முறையில் பரத நாட்டியத்தை இளைய தலைமுறைக்கு கொண்டு செல்லும் லாவண்யா பிரபுவுக்கு வாழ்த்துக்கள்.

●

# SRIMATHA CANCER CARE

(Secular Charitable Institution in support of indigent Terminally ill and Renal Failure patients)

Admn.Office No.466, 3rd Avenue, Indira Nagar, Chennai - 600 020.
Tel : 24421165, 24912308, 24413233 Email: dvijayasree.smcc@rediffmail.com
www.srimathacancercare.com



Founder & Managing Trustee
Dr. Hon D. VIJAYASREE MAHADEVAN
The Doctor of Cancer Care Service
91762 08165



புற்றுநோய் முற்றி விட, இனி சிகிச்சை பலன் தராது என்று மருத்துவர் கூறிவிட, வாழ்வதற்கு சிறிது காலம் தான் உள்ளது என்கிற நிலையில் இந்த நோயாளிகளுக்கு தேவை வலிதீர்க்கும் மருத்துவ சேவைகள், தாய்மையான காற்றோட்டமான சூழ்நிலை, ஆரோக்கியமான உணவு, நம்பிக்கையூட்டும் வார்த்தைகள், ஆதரவும் கனிவும் நிறைந்த அரவணைப்பு.

இவை அனைத்தும் அளித்து, உடலை வாட்டும் வலி, ரணங்கள், மனதை வாட்டும் மரணபயம் மற்றும் தனிமையை போக்கி உதவிகரம் நீட்டி வருகிறது சென்னை இந்திரா நகரில் வாடகைக் கட்டிடத்தில் அமைந்துள்ள ஸ்ரீ மாதா கேன்சர் கேர்.

## Donor's Feed Back

இறுதி நிலை புற்றுநோயால் அவதிப்படுபவர்களுக்கு ஆறுதல், அடைக்கலம் மற்றும் பராமரிப்பு தரும் உங்கள் அனைவரையும் கண்டு மனம் நெகிழ்கிறேன். இறையருள் இங்கு இருக்கின்ற சக்தியை உணர்கிறேன். இத்தகைய "Angels on Earth" புண்ணிய ஆத்மாக்களுக்கு என் மனமார்ந்த நன்றி.

– திருமதி. வித்யா குமார், *Melbourne, Australia*

*It is my fortune to visit this temple of smile. Time spent with Vijayasree Mahadhevan is worth millions. God bless everyone connected with this noble project.*

**L.N.M.S. Venkateswaran , Chennai.**

*We visited for a corporate donation – The facility and treatment are neat and genuine to the needy.*

**R. Kowsalya, Athena Health, Perungudi.**

இறைவன் அருளால் துரைப்பாக்கத்தில் நடக்கும் சொந்தப் புகலிடத்தின் கட்டிடபணி முழுவீச்சில் நடைபெற்று கொண்டிருக்கிறது. இதற்கான மொத்த செலவு ரூ.5 கோடி வரை தேவைப்படுகிறது என்று கட்டிட நிபுணர்கள் தெரிவித்துள்ளார்கள். ஊர் கூடி தேர் இழுக்க வேண்டும் என்று முன்னோர்கள் கூறுகிறார்கள். தங்களால் இயன்ற உதவிகளை இந்த புனித சேவைக்கு மனம் உவந்து அளிக்குமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம். இந்த கட்டிடத்தின் ஒரு சதுரடி அமைப்பதற்கு ரூ.2,500/- என்று இந்த புனித சேவையில் எல்லோரும் பங்கேற்று உதவலாம்.

இறைவன் அருளால் தாராளமாக தர்மம் செய்ய முடிந்தவர்கள் குறைந்தபட்சம் 100 சதுரடி (ரூ.2,50,000) முதல் தங்களால் இயன்ற சதுரடிகளை அமைத்து கொடுக்க உதவலாம். அவர்களது பெயர்கள் பளிங்கு கல்லில் பொறிக்கப்பட்டு காலத்திற்கும் நிலைத்திருக்கும். அது மட்டுமல்ல தங்களது இந்த உதவி வாழ்வின் விளிம்பில் துயரத்துடன் நிற்கும் ஏழை நோயாளிகளுக்கு புதிய நம்பிக்கையும், மன நிம்மதியும் தந்து, அவர்களின் உள்ளம் தங்களையும், தங்களது சந்ததியையும் வாழ்த்திக் கொண்டே இருக்கும்.

(இந்த சேவை பொது மக்களுடைய ஆதரவு கொண்டு தான் நடைபெறுகிறது. நீங்களும் உதவுவீர்கள் என்று நம்புகிறோம்) இந்த சேவைக்கு ரூ.1,00,000/- கொடுத்து நீங்கள் ஒரு நிரந்தர காப்பாளர் ஆகலாம். இந்த சேவைக்கு ரூ.60,000/- கொடுத்து வருடத்திற்கு ஒரு முறை இரண்டு நோயாளிகளை தத்தெடுத்து அவர்களது அனைத்து செலவுகளையும் ஒவ்வொரு ஆண்டும் மேற்கொள்ளலாம். (இந்த தொகை டிரஸ்டின் காப்பு நிதியில் சேர்க்கப்பட்டு அதன் வட்டியிலிருந்து இந்த தர்மம் செய்யப்படும்) ஒரு நாள் காப்பகத்தின் பராமரிப்பு செலவாக ரூ.10,000/ அளிக்கலாம். ஒரு நாள் சாப்பாட்டு செலவாக ரூ.4,000/ அளிக்கலாம். ஒரு நாள் ஒரு நபருக்கு இலவச டயாலிசிஸ் செய்ய ரூ.1,500/ அளிக்கலாம்.

தங்களது நன்கொடைகளை **SRIMATHA CANCER CARE** என்ற பெயரில் காசோலையாகவோ வரைவோலையாகவோ, உங்களது முழு முகவரியுடன், கைப்பேசி / தொலைபேசி எண்ணையும் எழுதி No.466, 3rd Avenue, Indira Nagar, Chennai - 600 020 என்ற முகவரிக்கு அனுப்பலாம்.

தாங்கள் அளிக்கும் நன்கொடைகளுக்கு 80(G) பிரிவின் கீழ் வருமான வரி விலக்கு உண்டு.

# அமெரிக்காவில் தமிழ் பேசுவோர் எண்ணிக்கை அதிகரிப்பு!

**அ**மெரிக்காவில் வசிக்கும் 30.5 கோடி பேரில் 6.7 கோடி பேர் வெளிநாட்டு மொழிகள் பேசுபவர்களாக உள்ளனர்.

இவர்களில் இந்தி பேசுவோரின் எண்ணிக்கை 8.63 லட்சமாகவும், குஜராத்தி பேசுவோரின் எண்ணிக்கை 4.34 லட்சமாகவும், தெலுங்கு பேசுவோரின் எண்ணிக்கை 4.15 லட்சமாகவும் உள்ளது.

அமெரிக்காவில் தமிழ்ப் பேசுவோர் எண்ணிக்கை கடந்த பத்தாண்டுகளில் கணிசமாக அதிகரித்துள்ளது. முதலிடத்தில் இந்தி மொழி இருந்தாலும், தமிழ் பேசும் மக்களின் எண்ணிக்கை 55 சதவீதம் அதிகரித்துள்ளது.

அமெரிக்கா வெளியிட்டுள்ள புள்ளி விவரத்தின்படி, 2010 ம் ஆண்டை ஒப்பிடும் போது, 2017 ம் ஆண்டில் தெலுங்கு பேசுவோரின் எண்ணிக்கை 86 சதவீதமும், இந்தி பேசுவோரின் எண்ணிக்கை 42 சதவீதமும், குஜராத்தி பேசுவோரின் எண்ணிக்கை 22 சதவீதமும் அதிகரித்துள்ளது.




வங்க மொழி பேசுவோரின் எண்ணிக்கை 57 சதவீதமும், தமிழ் பேசுவோரின் எண்ணிக்கை 55 சதவீதமும் அதிகரித்துள்ளது. இந்தியர்கள் மட்டுமின்றி வங்கதேசத்தினரும் வங்காள மொழி பேசுகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

அதே சமயம், அமெரிக்காவைப் பொறுத்தவரை, தமிழ் மொழிதான் அதிக வெளிநாட்டினரால் பேசப்படும் மொழியாக உள்ளது. இலங்கை, சிங்கப்பூர், மலேசியா நாட்டினரும் தமிழ் பேசுகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

# வ.உ.சி.யைக் கொண்டாடி மகிழ்ந்த அமெரிக்கத் தமிழ்க் குழந்தைகள்!

**டெ**லவர் மாநிலத்தில் செக்கிழுத்த செம்மல் வ.உ.சிதம்பரனாரின் 146வது பிறந்தநாள் விழா கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. இந்த விழாவில் ஓவியப் போட்டி, வினாடி வினா என ஆர்வத்துடன் பங்கேற்றி அசத்தினார்கள், அமெரிக்காவில் பிறந்து வளரும் தமிழ்க் குழந்தைகள்.

வ.உ.சியின் சாதனைகளைப் போற்றும் வகையில் ஓவியங்களைத் தீட்டி அவருக்கு மேலும் பெருமை சேர்த்தார்கள். வினாடி வினா நிகழ்ச்சி ஏழு வயதுக்குட்பட்டவர்கள் 8 முதல் 11 வயதினர் என இரு பிரிவாக நடைபெற்றது.

போட்டியில் கலந்து கொண்டவர்கள், வ.உ.சி பற்றிய அனைத்து தகவல்களையும் விரல் நுனியில் வைத்திருந்தது ஆச்சரியப்படுத்தியது. பார்வையாளர்களைப் பரவசப்படுத்தியது.

தொடர்ந்து, "கப்பலோட்டிய தமிழன் வ.உ.சியை நாம் ஏன் போற்ற வேண்டும்" என்ற தலைப்பில்



பெரியவர்களுக்கான பேச்சுப் போட்டி நடந்தது. செல்வகுமார் வேலு, ரமா ஆறுமுகம், பாரதி கண்ணன் முதலாவது, இரண்டாவது, மூன்றாவது பரிசுகளைத் தட்டிச் சென்றனர்.

டெலவர் பள்ளத்தாக்குப் பகுதிக்குட்பட்ட பென்சில்வேனியா, நியூ ஜெர்சி, டெலவர் மாநிலங்களில் வசிக்கும் ஏராளமான தமிழர்கள் விழாவில் பங்கேற்றனர்.

# அமெரிக்காவில் சென்னை பள்ளி மாணவர்கள்

**“அமெரிக்காவில் உள்ளவர்கள் பெரும் பணக்காரர்கள், ஸ்டைலானவர்கள், அதிகம் பழக மாட்டார்கள், நம்மைத் தொடக்கூட மாட்டார்கள் போன்ற எண்ணங்கள் இருந்தன. ஆனால் இங்கு அனைவரும் எங்கள் மீது காட்டும் அன்பும் அரவணைப்பும் எங்களை திக்குமுக்காடச் செய்து விட்டது.**

இங்கு சத்தமாக, கத்திப் பேசாமல், அருகில் சென்று பேசுவதை விரும்புகிறோம். நாம் இருக்கும் இடத்தையும், போகும் இடத்தையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும், அப்புறம் உணவை வீணாக்காமல் தேவையானதை மட்டும் உண்ணுதல், எங்கும் வரிசைமுறையைப் பயன்படுத்த வேண்டும்.

முக்கியமாக, எதிரில் வருவோரை நட்போடு பார்ப்பது, சிரிப்பது, பேசுவது, இப்படி பல நல்ல விஷயங்களைக் கற்றுக் கொண்டோம். நிச்சயமாக ஊருக்குச் சென்று, எங்கள் பள்ளிகளிலும், பழகுபவர்களிடமும் பகிர்ந்து கொள்வோம்” என்று கூறினார்கள் -

இப்படி சொன்னது, சென்னை மாநகராட்சிப் பள்ளி மாணவர்கள்.

சென்னை மாநகராட்சியை சேர்ந்த பள்ளி மாணவ, மாணவிகள், டெக்சாஸ் மாநிலத்தில் சான் அண்டோனியோ மற்றும் ஹூஸ்டன் நகரங்களுக்கு, கல்விச் சுற்றுலா வந்திருந்தனர்.

‘அனுஜா சான் அண்டோனியோ- சென்னை சிஸ்டர் சிட்டி’ என்ற அமைப்பும் சென்னை மாநகராட்சி மற்றும் சென்னை கிழக்கு ரோட்டரி கிளப் முயற்சியாலும் 8 மாணவர்களும் மூன்று பயிற்சியாளர்களும் கல்விச் சுற்றுலாவுக்காக அமெரிக்கா வரவழைக்கப்பட்டனர்.

ஹூஸ்டனில் ‘நாசா’ விண்வெளி நிலையம் ,ரைஸ் யூனிவர்சிட்டி, பெய்லர் மருத்துவப் பள்ளி, ஜார் பிரவுன் ஆய்வுமையம்,அறிவியல் அருங்காட்சியகம், மீனாட்சியம்மன் கோவில் போன்ற முக்கிய இடங்களுக்கு சென்று பார்வையிட்டனர்.

சான் அண்டோனியோவில், ‘நேச்சுரல் கேவன்ஸ்’, ஸீ வேர்ல்ட் ,சான் அண்டோனியோ ரோட்டரி கிளப், எஸ்.ஏ.கல்லூரி, ஸ்கோபி கோளரங்கம்,ஸ்பானிஷ் கவர்னர் அலுவலகம், சான் பெர்னாண்டோ தேவாலயம், சான் அண்டோனியோ இந்துக் கோவில், அறிவியல்-தொழில்நுட்ப அருங்காட்சியகம், புகழ் பெற்ற ‘ரிவேர் வாக்’ பார்ஜ் டூர், சான் அண்டோனியோ சர்வதேச விவகாரங்கள் அலுவலகம் இன்னும் பிற பகுதிகளுக்குச் சென்று வந்தனர்.



சான் அண்டோனியோ தமிழ்ச் சங்கத் தலைவர் ராஜகுரு, மாணவர்களை கௌரவப்படுத்தி விருந்தளித்து உபசரித்தார்.. அனைத்துக் குழந்தைகளுக்கும் ‘அறிவியல் கணிப்பொறிக் கருவி’ பரிசளிக்கப் பட்டது. மேலும் சென்னையில் பள்ளி செல்வதற்கு உதவியாக ‘சைக்கிள்’ வாங்கித் தரவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளது.

## ஞாபகம் வருதே

## பேர் வைச்சது யாரு?

**திமுக குடும்பத்தைச் சேர்ந்த மதி என்பவர், முரசொலியில் துணை ஆசிரியர்.**

கலைஞர் கடிதம் ஃப்ரூப் காட்டுவதற்காக கருணாநிதியின் வீட்டுக்குச் சென்றார் மதி. கடிதத்தைப் படித்துக்கொண்டிருந்த கலைஞர், ”அந்த லைட்ட ஆஃப் பண்ணு” என்று மதியிடம் சொன்னார்.

ஏதோ ஒரு சுவிட்சை அழுத்தினார் மதி. லைட் ஆஃப் ஆகவில்லை. ஃபேன் ஓடத் தொடங்கியது.

“லைட்ட ஆஃப் பண்ணச் சொன்னா, ஃபேன போடுற... உனக்கெல்லாம் எவன்யா மதின்னு பெயர் வச்சான்” என்றார் கலைஞர்.

அதற்கு மதி சொன்ன பதிலைக் கேட்டு ரசித்துச் சிரித்தார் கலைஞர்.

மதி சொன்ன பதில்...

“நீங்கதான்யா”



# நிலத்தைப் போலப் பணமும் தரிசாப் போச்சு

ஹரி

ஈபிள் டவரை விற்பதற்கு முன்பே, வங்கியில் மோசடி செய்து, வங்கி நிர்வாகத்தினரையே விக்டர் மிரட்டி நடுங்க வைத்த கதையை இப்போது பார்ப்போம்.

1922ஆம் ஆண்டு பிப்ரவரி 4ஆம் தேதி.

அமெரிக்காவில் உள்ள மிசோரி மாகாணத்தில் உள்ளது. பிரபல வங்கி. காலை நேரம் என்பதால் பிஸியாக இயங்கிக் கொண்டிருந்தது. பழைய மாடல் கார் ஒன்று வங்கியின் வாசலில் வந்து நின்றது. உயர் ரக ஆடையணிந்து, வெள்ளை முடியுடன், பட்டையான புருவங்களுடன், லேசாகக் கூன் விழுந்த ஒருவர் வங்கிக்குள் நுழைந்தார். பார்த்தவுடனேயே மதிக்கத்தக்க தோற்றம்.

வங்கியின் முக்கிய இயக்குநர்களில் ஒருவரான ராபர்ட்டின் அறையை விசாரித்து, கதவைத் தட்டிவிட்டு உள்ளே நுழைந்தார். அவரை வரவேற்று உட்கார வைத்த ராபர்ட், என்ன விஷயம் என்பதைப் போல அவரைப் பார்த்தார்.

''என் பெயர் பிரின்ஸ் தாமஸ். எங்கள் குடும்பம், ஆஸ்திரியாவில் மிகப் பெரிய பிரபு வம்சத்தில் வந்த குடும்பம். எங்களுக்கு முக்கியத் தொழிலே விவசாயம் தான். ஏராளமான பண்ணைகளும், தோட்டங்களும், குதிரை லாயங்களும், மாட்டுப் பண்ணைகளும் இருந்தன.


'SMOOTHEST CON MAN EVER BORN!'

the title is bogus), is shown being questioned by Robert L. Godby (right), U. S. agent in charge in New York, and Peter A. Rubano, Secret Service Agent, concern- ... counterfeit money found cached in a subway locker at Times Square. Other agents described Lustig as the "slickest bunko man who ever lived." Picture by Evening Journal

முதலாம் உலகப் போரில் எல்லாம் அழிந்து விட்டன. மிச்சம் இருக்கும் பணத்தைக்கொண்டு ஏதாவது வியாபாரம் செய்யலாம் என்று அமெரிக்காவுக்கு வந்துவிட்டேன்...'' சொல்லிவிட்டுக் கொஞ்சம் ரிலாக்ஸ் செய்து கொண்டார் பிரின்ஸ்.

''என்ன சாப்பிடுகிறீர்கள்?... பிளாக் காபி கொண்டு வரச் சொல்லட்டுமா?...''

''சரி...'' என்று தலையசைத்த பிரின்ஸ், மீண்டும் தன் கதையைச் சொல்லத் தொடங்கினார்.

''பலவிதமான வியாபாரங்களைப் பற்றி யோசனை செய்து விட்டேன். எதுவுமே சரியாக வராது என்று தோன்றுகிறது. என் குடும்பத் தொழிலான விவசாயம்தான் சரியாக வரும் என்று நினைக்கிறேன். அதற்காகத்தான் உங்கள் உதவியை நாடி வந்திருக்கிறேன்...''

''எங்கள் வங்கி என்ன செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கிறீங்க?...''

''உங்க கிட்ட இருக்கிற தரிசு நிலத்தை வாங்க நான் ஆர்வமா இருக்கேன்...''

''வெறும் தரிசு நிலத்தை வாங்கி என்ன செய்யப் போறீங்க?... அதில் பயிர் பச்சை எதுவும் விளையாதே?...''

''நான் என் திறமையையும் அனுபவத்தையும் பயன்படுத்தி அந்த நிலத்தை விவசாயப் பண்ணையா மாற்றுவேன். அதற்கான திட்டமும் ரெடியா இருக்கு...''

''உங்களுக்கு நம்பிக்கை இருந்தா சரிஞ் அந்த நிலத்தைத் தர எங்களுக்கு எந்த ஆட்சேபனையும் இல்லை...''

''எங்கிட்ட 22 ஆயிரம் டாலர் மதிப்புள்ள கருவூலக் கடன் பத்திரம் இருக்கு. அந்தப் பத்திரத்தைத் தர்றேன்... அந்த நிலத்துல இருந்து எனக்கு வருமானம்





வரக் கொஞ்சம் நாளாகும். அதனால 10 ஆயிரம் டாலர் மதிப்புள்ள பத்திரத்துக்கு மாற்றா பணம் வேணும்...''

அந்த வங்கியின் இயக்குநர் அந்தப் பத்திரத் தாளை ஆராய்ந்தார். எல்லாம் சரியாக இருந்தன. மற்ற இயக்குநர்களிடம் தனியாகக் கலந்து ஆலோசித்தார். எல்லோரும் ஒப்புக் கொண்டனர்.

எல்லோருக்கும் ரொம்பவும் சந்தோஷம். ஒன்றுக்கும் உதவாத அந்தத் தரிசு நிலத்துக்கு இவ்வளவு பணம் கிடைக்கிறதே! பத்திரமும், பணமும் கை மாறின.

பிரின்ஸ் தாமஸ் என்ற பெயரில் வங்கியில் நுழைந்த விக்டர் லுஸ்டிக், வங்கிக்குள் எப்படி ரிலாக்ஸாக வந்தானோ, அதேபோல் வெளியேறினான்.

விக்டர் கொடுத்த பத்திரம் தங்கள் தரிசு நிலத்தைப் போலவே ஒன்றுக்கும் உதவாதது, போலி என்பது வங்கித் தரப்புக்குத் தெரிய வந்தபோது, அவன் மிசோரி மாகாணத்திலேயே இல்லை.

** ** **

அமெரிக்காவின் நியூயார்க்கில் உள்ள பிரபல பார்.

அமெரிக்காவின் பிரபலத் துப்பறியும் நிறுவனத்தின் மூத்த அதிகாரி அகேன்ச் அங்கு உட்கார்ந்திருந்தார். கண்டிப்பானவர், திறமையானவர் என்று பெயர் பெற்றவர்.

வங்கி மோசடிகளையும், இன்சூரன்ஸ் மோசடிகளையும் கண்டுபிடிப்பதில் திறமையானவர்.

இப்போதும் அந்த விஷயமாகத்தான் நியூயார்க் வந்திருக்கிறார். இந்த பாருக்கு வந்த காரணமும் அதுதான்.

அவர் தேடி வந்த நபர், மூலையில் உள்ள ஒரு டேபிளில் ரொம்பவும் நிதானமாகக் குடித்துக் கொண்டிருந்தார்.

அந்த நபரின் மேல் இருந்து கண்ணை அப்படி இப்படி அசைக்கவில்லை அகேன்ச். அந்த நபரையே கழுகுப் பார்வை பார்த்துக் கொண்டிருந்தார்.

இரவு ஏற ஏற பாரில் இருந்த கூட்டம் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்து





கொண்டிருந்தது.

மதுபான பாரை மூடும் நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. அகேன்ச் எதிர்பார்த்த நேரமும் வந்து விட்டது. போதை ஏறிய அந்த நபர், மெல்ல பாரை விட்டு வெளியே வந்தார். அகேன்ச், அவரை நெருங்கினார். அந்த நபரின் இடுப்பில் துப்பாக்கியை வைத்து அழுத்தினார்.

''என்ன வேண்டும் உனக்கு?... இந்தா என் பர்ஸ்... என்னை ஒன்றும் செய்துவிடாதே...'' என்றார் அந்த நபர்.

அவரிடம் எதுவும் பேசாமல், தயாராக வந்து நின்ற காரில் அந்த நபரை ஏற்றினார் அகேன்ச். கார் கிளம்பியது.

** ** **

விக்டர் கொடுத்த பத்திரம் போலி என்பதைத் தாமதமாகத் தெரிந்துகொண்ட வங்கித்தரப்பு, அவனைக் கண்டுபிடிக்கும் வேலையைத் துப்பறியும் நிறுவனம் ஒன்றிடம் கொடுத்தது. அந்த நிறுவனத்தைச் சேர்ந்தவர் தான் அகேன்ச்.

நியூயார்க்கில் பிடித்த விக்டரை, மிசோரி மாகாணத்துக்குக் கொண்டு வந்து வங்கி இயக்குநர்கள் முன்னிலையில் நிறுத்தினார் அகேன்ச். மாட்டிக்கொண்டோமே என்று முகத்தில் கொஞ்சம் கூடப் பயமோ, கவலையோ இல்லாமல் கால் மேல் காலைப் போட்டுக்கொண்டு அலட்சியமாக உட்கார்ந்திருந்தான் விக்டர்.

அவன் உட்கார்ந்திருந்த நாற்காலியைச் சுற்றி வங்கி அதிகாரிகள் சூழ்ந்துகொண்டு அவனைக் கேள்விகளால் குடைந்து கொண்டிருந்தனர்.





எந்தக் கேள்விக்கும் அவன் பதிலளிக்கவில்லை. எல்லோரையும் அலட்சியமாகப் பார்த்தபடியே இருந்தான்.

நீண்ட நேரம் விசாரணை நடத்தியும் விக்டரிடம் இருந்து ஒரு தகவலும் பெயரவில்லை.

''எங்க பணத்தைக் கொடுத்துடு. உன்னை விட்டுடுறோம்...'' என்று முரட்டுத்தனமாக இருந்த வங்கி அதிகாரி ஒருவர், விக்டரை முறைத்தபடியே கூறினார்.

கொஞ்சம் கூட அசரவில்லை விக்டர். நிதானமாகக் கேட்டான்:

''ஒருவர் குற்றம் செய்தால், அவரை என்ன செய்வீர்கள்?...''

''ம்ம்... போலீசிடம் பிடித்துக் கொடுத்துடுவோம்...'' என்றார் வங்கி அதிகாரி.

''அப்ப போலீசை வரச் சொல்லுங்க. அவங்கக்கிட்ட என்னை ஒப்படைச்சிடுங்க...'' என்றான் விக்டர்.

''கண்டிப்பா... போலீசிடம் உன்னை ஒப்படைக்கத்தான் போறோம்... இருந்தாலும் உனக்கு ஒரு சான்ஸ் தர்றோம்... எங்க பணம் எங்க இருக்குன்னு மட்டும் சொல்லு... போலீசில் ஒப்படைக்காமல் உன்னை விட்டுடுறோம்...''- வங்கி அதிகாரி.

''என்னது சின்னப்புள்ளத்தனமா இருக்கு... போலீசுக்கு எப்படிப் போவீங்க?... போலீசுக்குப் போனா, நீங்க ஏமாந்த கதையைச் சொல்ல வேண்டி வரும். அந்த விவரம் பத்திரிகைகளில் வரும்... பத்திரிகைகளில் வந்தா எல்லா மக்களுக்கும் இந்த விஷயம் தெரியும்...

அப்புறம் உங்க வங்கியோட பேரு நாறிடும்... உங்க வங்கி மேல இருக்குற நம்பிக்கை போயிடும்... உங்க பேங்குல பணம் போட்டவங்க எல்லாம் ஒரே நேரத்துல பணத்த எடுக்கத் தொடங்கிடுவாங்க... கடைசியில வங்கியை மூடும் நிலைம வந்துடும்... இது தேவையா உங்களுக்கு?... நீங்களே முடிவு செஞ்சுக்கோங்க...''

விக்டர் சொன்னது அங்கிருந்த வங்கியினர் மத்தியில் கடும் அதிர்வலையை ஏற்படுத்தியது. ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர்.

காரணம், போலீக்குப் போனால் வங்கியின் பெயர் கெட்டுப் போகும் என்று தான், இந்த வழக்கைத் தனியார் துப்பறியும் நிறுவனத்திடம் கொடுத்தனர். அந்தக் கருத்தை விக்டர் எடுத்துச் சொன்னவுடன், என்ன செய்வதென்று புரியாமல் கொஞ்ச நேரம் எதுவும் பேசாமல் நின்றுவிட்டனர்.

பிறகு, எல்லோரும் தனி அறையில் கூடி விவாதித்தனர். கடைசியில், விக்டரை அனுப்பி விடுவது என்று முடிவெடுத்த அவர்கள், ''நீங்க போகலாம்...'' என்றனர்.

அப்படிச் சொன்னதும் சரியென்று கிளம்பி விடுவானா விக்டர்? எமகாதகனாயிற்றே?!

''போங்கன்னு சொன்னா எப்படிப் போறது?... இங்க இருந்து திரும்பவும் நியூயார்க்குக்குப் போறதுக்கான பயணச் செலவையும், ஜென்டில்மேனான என்னைத் தொந்தரவு கொடுத்ததுக்கு நஷ்ட ஈடா ஆயிரம் டாலரையும் தரணும்...'' என்று வங்கி அதிகாரிகளிடம் கேட்க, அவனை அப்படியே கொன்று விடலாமா என்னும் அளவுக்கு வங்கி அதிகாரிகளுக்குக் கோபம் வந்தது.

ஆனால், வேறு வழி?

விக்டர் கேட்ட பணத்தைக் கொடுத்து வழியனுப்பி வைத்தார்கள்.

## 04

ஏமாற்றுவதே ஒரு சுகம் தான்

கனடாவின் மொண்ட்ரியல் நகரம்.

வேறொரு பிசினஸ் விஷயமாக அங்கு வந்த விக்டருக்கு, வந்த வேலை ஆகவில்லை.

இந்தப் பயணம் வீணாகப் போனதில் விக்டருக்கு வருத்தம் தான் என்றாலும், வந்ததற்கு ஊரைச் சுற்றிப் பார்க்கலாம் என்று புறப்பட்டான்.

கடைசியாக, அந்த ஊரின் பிரபலமான குதிரைப் பந்தய மைதானத்திற்குச் சென்றான். மைதானம், ஒரே கூச்சல், குழப்பம், பரபரப்பாக இருந்தது.

கோட், சூட் போட்ட கனவான்கள் முதல் சாதாரணக் கூலித் தொழிலாளிகள் வரை, ஓடிவரும் குதிரைகளைப் பார்த்து, ''கமான் கமான்...'' என்று கத்திக் கொண்டிருந்தார்கள்.



அவர்களில் ஒருவர் மட்டும் கொஞ்சம் வித்தியாசமாகத் தெரிந்தார். அவரிடம் பணக்காரத் தனம் தெரிந்தது. 'பீக் அவரில்' வரும் நம்ம ஊர் பஸ்ஸைப் போல நிரம்பி வழிந்த பர்ஸ், பைக்கு வெளியே பாதித் தெரிந்தபடி இருந்தது.

அவரைப் பார்த்ததும், விக்டர் லுஸ்டிக்கின் கிரிமினல் மூளை துரிதமாக வேலை செய்தது. உள்ளங்கை அரிக்கத் தொடங்கியது. இந்த ஊருக்கு வந்துவிட்டு வெறும் கையுடன் எதற்குப் போக வேண்டும்?

இந்த இடத்தில் ஒரு ஆட்டத்தை ஆடிப் பார்த்து விடுவோமா? இப்படி எண்ணிக்கொண்டு விக்டர் தன் மனதுக்குள் பூவா தலையா போட்டுப் பார்த்ததில், 'ஆடிவிடு' என்ற சாதகமான பதில் கிடைத்தது.

அருகில் இருந்தவரிடம் அவரைப் பற்றி விசாரித்தான்.

அவர் பெயர் வேர்மொன்ட். பெரிய பணக்காரர். பல பிசினஸ்களில் இருந்து பணம் கொட்டுகிறது. பாதி நேரம் ரேஸ் மைதானமே கதின்னு இருப்பார்.

இது போதுமே!

குதிரைகள் எல்லைக்கோட்டை நெருங்கும் சமயம், எல்லோரின் கவனமும் அங்கே இருக்க, மெதுவாக வேர்மொன்ட்டின் பாக்கெட்டில் இருந்த பர்சை எடுத்துக்கொண்டு அங்கிருந்து நகர்ந்தான்.

** ** **

மறுநாள். அதே குதிரைப் பந்தய மைதானம். தோரணையுடன் இருந்த வெர்மொன்ட்டின் அருகில் சென்றான் விக்டர்.

''மிஸ்டர் வெர்மொன்ட்... இந்த பர்ஸ் உங்களுடையது தானே?'' என்று கேட்டுவிட்டு, நேற்று அவரிடமிருந்து, தான் எடுத்த பர்ஸை நீட்டினான்.

''ஆமா... என்னதுதான்... நேத்துத் தொலைஞ்சி போயிடுச்சி... உங்களுக்கு எப்படிக் கிடைச்சது?...''

''கீழே கிடந்தது... எடுத்துப் பார்த்தா நிறையப் பணம் இருந்தது... உள்ளே உங்க போட்டோவும் அட்ரசும் இருந்தது... இன்னிக்கு நீங்க இங்க வரலேன்னா... உங்க அட்ரசுக்கு நானே கொண்டு வந்து கொடுக்கலாம்ன்னு இருந்தேன்...''

பர்ஸைத் திறந்து பார்த்தார் வெர்மொன்ட். மொத்தப் பணமும் அப்படியே இருந்தது. ஒரு பைசா கூடக் குறையவில்லை. ஆச்சரியத்துடன், ''ரொம்ப தேங்க்ஸ்... உங்க பேர் என்ன? என்ன தொழில் பண்றீங்க?...'' என்று கேட்டார் வெர்மொன்ட்.

''என் பெயர் வில்லியம்... என் குடும்பத் தொழில் இரும்பு பிஸினஸ்ஞ் நாங்கள் கோடீஸ்வரர்கள்ஞ் தொழில் நலிஞ்சு போச்சு... இருக்கிறத வச்சுக்கிட்டுக் கௌரவமாக வாழ்ந்துக்கிட்டிருக்கோம்...''

இதையடுத்துப் பல விஷயங்களில் பேச்சுத் திரும்பியது. இருவரும் மிகவும் நெருக்கமாகி விட்டார்கள். வில்லியமின் நேர்மை வெர்மொன்ட்டுக்கு மிகவும் பிடித்து விட்டது.

தன் பர்ஸைத் திறந்து கற்றையாக நோட்டுகளை எடுத்து வில்லியமிடம் கொடுத்தார் வெர்மென்ட். அதை வாங்க மறுத்து விட்டான் வில்லியம் என்ற பெயரில் இருந்த விக்டர்.

''எனக்கு நீங்க ஏதாவது உதவி செய்யணும்ன்னு நினைச்சா ஒண்ணு செய்யுங்க... என்னுடைய சொந்தக்காரப் பையன் 'எமில்' என்பவன், ஒரு குதிரைப் பந்தய புக்கிங் ஆபீசுல வேலை பாக்குறான்...

ரேசுலஎந்தக் குதிரை ஜெயிக்கும்ன்னு அவனால சரியாச் சொல்ல முடியும்... அதனால அவன் சொல்ற குதிரை மேல பணத்தைக் கட்டுங்க... உங்களுக்கு வரக்கூடிய லாபத்தில 10 சதவீதத்தை எனக்குக் கொடுத்துருங்க...'' என்றான் விக்டர்.

விக்டர் மீது ஏற்கெனவே நம்பிக்கை இருந்ததால், முதலில் சிறிய தொகையைக் கொடுத்துச் சோதனை செய்தார் வேர்மொன்ட். அந்தத் தொகையை நல்ல லாபத்துடன் திருப்பிக் கொடுத்துத் தனக்குச் சேர வேண்டிய 10 சதவீத கமிஷன் தொகையை மட்டும் வாங்கிக்கொண்டான் விக்டர்.

விக்டர் மூலம் வேர்மொன்ட்டுக்கு நல்ல லாபம் கிடைத்து வந்தது. இப்படியே சில நாட்கள் கடந்தன.

ஒருநாள் வேர்மொன்ட்டிடம் வந்த விக்டர், ''என் சொந்தக்காரன் எமிலின் மனைவிக்கு உடம்பு சரியில்லை... அதனால் அவன் வேலையை விட்டுட்டுச் சொந்த ஊருக்குப் போயி செட்டிலாக நினைக்கிறான்... எமில் மூலம் கடைசியாக ஒரு பெருந்தொகையைக் கட்டினால், பல மடங்கு லாபம் சம்பாதித்து விடலாம்...'' என்றான்.




வேர்மொன்ட் கொஞ்சம் கூட யோசிக்கவில்லை. பெருந்தொகையை பெட்டிங் கட்ட, விக்டரிடம்

கொடுத்தார். அந்தப் பணத்தை எடுத்துக்கொண்டு போனவன், போனவன் தான். திரும்பி வரவேயில்லை.

இந்த மோசடியில் மட்டும், விக்டருக்கு லாபம் எவ்வளவு தெரியுமா? 32 ஆயிரம் டாலர்.

** ** **

நியூயார்க்கின் ஒதுக்குப்புறமான பகுதியில் உள்ள அந்தச் சாதாரண விடுதிக்குள் விக்டர் லுஸ்டிக் நுழைந்தான். ரிசப்ஷனில் இருந்தவனிடம், ''அல் கபோனைப் பார்க்கணும்...'' என்றான்.

''உடம்புல உயிர் இருக்கணும்ன்னா உடனேயே இங்கிருந்து போயிடு...'' கோபப்படாமல் அமைதியாகச் சொன்னான் அவன்.

''முக்கியமான விஷயம் பேசணும்...''

''உன் பேர் என்ன?...''

''எட்வின்...''

''உட்கார்ஞ் இப்ப வர்றேன்...''

படியேறி மேலே போனவன் சில நிமிடங்களில் திரும்பி வந்து, ''109ஆம் ரூமுக்குப் போ...'' என்றான்.

** ** **

படிகளில் ஏறும்போதே, அல் கபோனிடம் எப்படிப் பேச வேண்டும் என்று ஒத்திகை பார்த்துக்கொண்டான் எட்வின் என்ற விக்டர் லுஸ்டிக்.

காரணம், அவன் சந்திக்கப் போகும் நபர் அப்படிப்பட்டவன். நிழல் உலகத் தாதாக்களில் முக்கியமானவன் அல் கபோன். கொஞ்சம் சந்தேகம் எழுந்தாலும் சிறு எலும்பும்கூட மிஞ்சாது என்று எட்வினுக்குத் தெரியும்.

அடுத்தவரை ஏமாற்றுவதே சுகம். அதிலும், நிழல் உலகத் தாதா, மாஃபியாக் கும்பலில் முக்கியமானவன், பயங்கரமானவன், கொலைப் பாதகத்துக்கு அஞ் சாதவன் எனச் 'சர்வதேசப் புகழ்' வாய்ந்த அல் கபோனை ஏமாற்றுவது பரம சுகம்.

''அல் கபோனிடம் இருந்து கொஞ்சப் பணத்தையாவது ஆட்டய போடுவேன்... இல்லேன்னா கொஞ்சப் பணத்தைப் பரிசாவாவது வாங்குவேன்...'' என்று தன் சிஷ்யனிடம் சொல்லி விட்டு வந்திருந்தான் விக்டர்.

** ** **

109ஆம் ரூமின் கதவைத் தட்டினான். ''வா...'' ஒற்றை வார்த்தையில் உள்ளிருந்து குரல் வந்தது.

''என்ன விஷயமாக என்னைப் பார்க்க வேண்டும்?...'' கட்டையாய், குட்டையாய் இருந்த அல் கபோன் கேட்டான்.

புதுமையான நிதித்திட்டம் ஒன்றை எடுத்துச் சொன்னான் விக்டர். இந்த நிதித்திட்டத்துக்கு 50 ஆயிரம் டாலர் தேவைப்படுகிறது என்றும், இந்தத் தொகையைக் கொடுத்தால் இரண்டே மாதத்தில் ஒரு லட்சம் டாலராகத் திருப்பிக் கொடுத்து விடுவதாகவும் கூறினான்.



விக்டர் சொன்ன திட்டம், அல் கபோனுக்குப் பிடித்து விட்டது.

50 ஆயிரம் டாலரை ஒரு பெட்டியில் வைத்துக் கொடுத்தான் அல் கபோன்.

விக்டரை வெளியே அனுப்புவதற்கு முன், பல கோணங்களில் அவன் போட்டோ எடுக்கப்பட்டான்.

எதற்காக போட்டோ எடுக்கிறார்கள் என்று விக்டருக்குத் தெரியும். எந்த வழியிலும் அவன் ஊரை விட்டு வெளியேற முடியாது. எல்லா இடங்களிலும் அல் கபோனுக்கு ஆட்கள் இருக்கிறார்கள். எங்காவது தப்பிக்க நினைத்தால் அடுத்த நிமிடம் விக்டர் மடக்கப்படுவான்.

** ** **

அல் கபோனிடம் வாங்கிய 50 ஆயிரம் டாலரையும் வங்கி லாக்கர் ஒன்றில் வைத்த விக்டர், இரண்டு மாதங்களையும் ஓய்விலேயே கழித்தான்.

சரியாக இரண்டு மாதங்கள் முடிந்தவுடன், லாக்கரில் இருந்த 50 ஆயிரம் டாலரையும் எடுத்துக்கொண்டு போய், அல் கபோனிடம் கொடுத்தான்.

''நான் போட்ட திட்டம் எதிர்பார்த்த பலனைத் தரவில்லை... அதனால் நீங்கள் கொடுத்த 50 ஆயிரம் டாலரைத் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்...'' என்று கூறிப் பணத்தை ஒப்படைத்தான்.

இலாபம் இல்லா விட்டாலும் நஷ்டமில்லை என்பதால் விக்டரின் நேர்மையான குணத்தைப் பாராட்டி, விக்டருக்கு 5 ஆயிரம் டாலரைப் பரிசாக அளித்தான்.

அந்த 5 ஆயிரம் டாலரைத் தன் சிஷ்யனிடம் காட்டிப் பெருமைப்பட்டுக்கொண்டான் விக்டர்.

''எப்படித் தலைவரே?...''சிஷ்யனுக்கு ஆச்சரியம்.

''அல் கபோனை ஏமாற்றுவது என்பது எமனுக்கு 'ஹலோ' சொல்வதைப் போல என்பது எனக்குத் தெரியும். அதனால்தான் அவனை ஏமாற்றாமல், அவனாக எனக்குப் பணத்தைத் தரும்படிச் செய்துவிட்டேன்...'' என்று சொல்லிச் சிரித்தான் விக்டர்.

விக்டரின் பேங்க் பேலன்ஸ் ஒரு பக்கம் ஏறிக்கொண்டிருக்க, அவனுடைய குற்றங்களின் பட்டியலும் எக்கச்சக்கமாக எகிறிக்கொண்டிருந்தது.

●

SANKARA NETHRALAYA OM TRUST

# SANKARA NETHRALAYA & SANKARA NETHRALAYA OM TRUST, INC, USA

SANKARA NETHRALAYA




## A jubilant 'Thumbs Up' expresses his revived vision!

**Babu is among millions of vision impaired children in rural India who have regained their sight through Sankara Nethralaya's cost free community service**

Donate generously to dispel not only the darkness of visual impairment but also the darkness of ignorance in this delicate group.

Contributions made by Indians living in the USA helped in performing a very large number of cost free surgeries in year 2017

**All contributions to the SN OM Trust are 100% tax exempt in the USA under 501 (C)(3) of IRS**

Contact:

Mr. S.V. Acharya, President Emeritus, (855) 4NETHRA - Toll Free, snomtrustusa@yahoo.com

Mrs. Leela Krishnamoorthy, President,(832) 654-9444,Leela@icloud.com

Sankara Nethralaya OM Trust Inc, USA

Checks may be drawn on Sankara Nethralaya OM Trust Inc. Donate online : www.sankaranethralayausa.org

# "முடியாதுன்னு சொல்லவா டில்லியிலிருந்து இங்கே வந்தீங்க?" - காமராஜரின் கோபம்

**அன்று அரசு நடந்த முறையையும், இன்று அரசுகள் நடக்கும் முறையையும் ஒப்பிட்டுப் பார்க்க ஓர் உதாரணம்.**

1976ம் ஆண்டு துக்ளக் இதழில் "சோ' எழுதியது:

என் சித்தப்பா தென்னிந்திய ரயில்வேயில் ஓர் உயர்ந்த பதவியில் இருந்தார். அவர் விவரித்த நிகழ்ச்சி இது: சென்னையில், ரிசர்வ் வங்கி கட்டிடத்தின் எதிரில், சுரங்கப்பாதைக் கட்டியிருக்கிறார்களே, அது பற்றியச் செய்தி இது. அந்த, "சப்வே' கட்டுவதன் செலவின் ஒருப் பகுதியை மத்திய அரசும், ஒருப் பகுதியை மாநில அரசும் ஏற்க வேண்டும் என்று ஏற்பாடு.

அந்த, "சப்வே' எப்படிக் கட்டுவது, அதன் செலவுகள் என்ன, மத்திய, மாநில அரசுகள் அதை எப்படி பங்கீடு செய்து கொள்வது, "சப்வே' கட்டுவதில் என்ன விதமான இன்னல்கள் ஏற்பட வாய்ப்புகள் இருக்கக்கூடும், அவற்றை எப்படி தவிர்ப்பது போன்ற பல பிரச்சனைகளைப் பேசித் தீர்ப்பதற்காக, சென்னையில் ஆலோசனைக் கூட்டம் நடத்தப்பட்டது.

கூட்டத்தில், மத்திய அரசின் சார்பாக, ரயில்வே அமைச்சர் கலந்து கொண்டார். தமிழக அரசின் சார்பில் காமராஜர் கலந்து கொண்டார். மத்திய - மாநில அதிகாரிகள் பலரும் கலந்து கொண்டனர். "சப்வே' திட்டத்தின், "டெக்னிக்கல்' விவரங்களை எடுத்துச் சொல்வது என் சித்தப்பாவின் பொறுப்பாகிறது.

அவர் பேச ஆரம்பித்தார். காமராஜருக்கு ஆங்கிலம், புரியுமோ, புரியாதோ என்ற சந்தேகத்தில் அவர் தமிழில் பேச ஆரம்பித்து, "டெக்னிக்கல்' விவரங்களைத் தமிழில் சரியாக விளக்க முடியாமல் திணற ஆரம்பித்தார்.

அவரைப் பார்த்து, "எனக்கு புரியுமோ, புரியாதோன்னு தானே தமிழில் பேச முயற்சி பண்றீங்க? பரவாயில்லை. இங்கிலீஷிலேயே பேசுங்க. எங்கேயாவது ஒண்ணு, ரெண்டு பாயின்ட் புரியலேன்னா, நான் உங்களைக் கேட்டுக்கிறேன்...' என்று கூறியிருக்கிறார் காமராஜர். அதன் பிறகு என்னுடைய சித்தப்பா, "சப்வே' திட்டத்தை விவரித்துள்ளார்.

ஏதோ ஓரிடத்தில் அவரது பேச்சை நிறுத்தி, விளக்கம் கேட்டிருக்கிறார் காமராஜர். இதன் பிறகு விவாதம் ஆரம்பித்திருக்கிறது.

மத்திய அரசின் பிரதிநிதியாக வந்திருந்த மந்திரி, "இந்த, "சப்வே' கட்டுவதற்கு செலவு அதிகமாகும். எனவே, இதை இப்போது கட்ட முடியாது...' என்று



பேசியிருக்கிறார். காமராஜருக்கு மிகுந்த கோபம் வந்துவிட்டது. எழுந்தார்.

மத்திய மந்திரியை வெறித்துப் பார்த்து, "உட்காருய்யா; கட்ட முடியாதுன்னு சொல்லவா கான்பிரன்ஸ் போட்டோம்? எப்படி கட்டி முடிக்கிறதுன்னு தீர்மானம் செய்யத் தான் இந்த மீட்டிங்; ஏன் கட்ட முடியாதுன்னு காரணம் காட்டற மீட்டிங் இல்லை இது. "முடியாது, முடியாது'ன்னு சொல்லவா மந்திரியானீங்க, நீங்க? மந்திரின்னா, எப்படி செய்து முடிக்க முடியும்ன்னு வழி தேடறவன்; முடியாதுன்னு சொல்றவன் இல்லை.

"முடியாதுன்னு சொல்லவா டில்லியிலேருந்து இங்கே வந்தீங்க? அங்கேயிருந்தே சொல்லியிருக்கலாமே! முடியாதாம்... முடியாது! இதுக்கா ஜனங்க ஓட்டுப் போட்டாங்க. நீ பேசாம உட்காரு; நான் பிரைம் மினிஸ்ட்டர்கிட்டே பேசிக்கிறேன்; "சப்வே' கட்டறோம்; அதான் முடிவு. எப்படின்னு டிஸ்கஸ் பண்ணி, விவரங்களை எடுத்துக்கிட்டு என்னை வந்து பாருங்க...' என்று கூறிச் சென்றார் காமராஜர்.

சப்வே' கட்டப்பட்டது.

இப்படி இந்த ஒரு நிகழ்ச்சியில் அவரது பல குணாதிசயங்கள், பல கோணங்களில் வெளிப்பட்டு, அவர் எவ்வளவு மதிப்புக்குரியவர் என்று நினைத்துப் பார்த்து உணர்ந்து கொள்ள எனக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. ஒரு மனிதன் எவ்வளவு காலம் வாழ்ந்தான் என்பது முக்கியமல்ல; எப்படி வாழ்ந்தான் என்பது தான் முக்கியம். காமராஜர் வாழ்ந்த விதத்தை ஆழ்ந்து நினைத்துப் பார்க்க நான் கடமைப்பட்டிருக்கிறேன்.

# "எதிர்க்கட்சித் தலைவரான வாஜ்பாயை நேரடியாக சென்று வரவேற்ற இந்திய ஜனாதிபதி"



**அரசியல் வேறுபாடுகளை கடந்து...காங்கிரஸ் ஆட்சிக்கு பேருதவியாக செயல்பட்ட பண்பாளர் வாஜ்பாய்.**

இந்திய பிரதமராக நரசிம்மராவ் செயல்பட்டபோது... எதிர்க்கட்சித் தலைவராக வாஜ்பாய் செயல்பட்டார். அக்காலகட்டத்தில்... வல்லரசு நாடுகளில் ரஷ்யா மட்டுமே இந்தியாவிற்கு நட்பு நாடாக செயல்பட்டது...

அப்போது... "காஷ்மீரில் தனி வாக்கெடுப்பு நடத்தவேண்டுமென்ற மசோதாவை" ஐநாவில் வல்லரசுநாடான அமெரிக்கா பாகிஸ்தானின் தூண்டுதலால் தாக்கல் செய்தது..! அந்த மசோதாவின் மீதான விவாதத்தில் இந்திய பிரதிநிதிகள் பேசினர்..! ஆனால்... இந்திய பிரதிநிதிகளின் வாதங்கள் சரியாக அமையாதக் காரணத்தால்...

அந்த மசோதா வெற்றிபெற்று விடும்- என்பதையும், அடுத்த இருநாட்கள் ஐநா-விற்கு விடுமுறையாக இருப்பதால் அதற்குள்ளாக வலிமையானக் கருத்துக்களையுடைய இந்தியப் பிரதிநிதிகள் கலந்து கொண்டால் நன்றாக இருக்கும் - என்னும் தகவல் ... இந்திய ஜனாதிபதிக்கு தெரிவிக்கப் பட்டது...!

இது தொடர்பாக இந்திய ஜனாதிபதி சங்கர்தயாள் சர்மாவும், பிரதமர் நரசிம்மராவும் ஆலோசித்தனர்..! ஐநா விவாதத்தில் பங்கேற்பதற்கு எதிர்க்கட்சித் தலைவரான வாஜ்பாயே சிறந்தவர் - என்னும் நரசிம்மராவின் முடிவை ஏற்று...

குலுமணாலியில் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த வாஜ்பாயை...தனி விமானத்தில் ஐநா கூட்டத்திற்கு அனுப்பி வைத்தார்கள்...!

வல்லரசு நாடுகளில்.. அமெரிக்கா மற்றும் சீனா மசோதாவிற்கு ஆதரவு... ரஷ்யா மட்டுமே மசோதாவிற்கு எதிர்ப்பு... பிரான்சும் பிரிட்டனும் முடிவெடுக்காத நிலை...

இந்த நிலையில் ஐநா விவாதத்தில் பங்கேற்க வருகின்ற வாஜ்பாயின் வருகையை அமெரிக்கப் பத்திரிகைகள் முக்கியத்துவமாகக் கருதிய பல பத்திரிக்கைச் செய்திகள் வெளியாகி பரபரப்பை ஏற்படுத்தின.

அமெரிக்காவில் வந்திறங்கிய வாஜ்பாயிடம்... அமெரிக்க பத்திரிகைகள் பேட்டி எடுக்க போட்டியிட்டன...

வாஜ்பாய் - "எனது நாட்டிலுள்ள தீவிரவாதத்துக்கு எதிராக எங்கள் அரசு நடவடிக்கை எடுப்பதை வல்லரசு நாடுகள் எதிர்ப்பதுத் தவறு... அமெரிக்காவால் கொண்டுவரப் பட்டிருக்கின்ற மசோதாவை வல்லரசு நாடுகள் ஆதரித்து... இந்தியாவிலிருந்து காஷ்மீர் பிரிவதற்கு காரணமாக இருக்கும் நாடுகளிலுள்ள தீவிரவாதிகளுக்கு இந்தியா ஆதரவளிக்கும்"..- என்று தெளிவாகக் குறிப்பிட்டார்.

பத்திரிகைகள் - "எதிர்க்கட்சித் தலைவரான உங்கள் முடிவை இந்திய அரசு ஏற்குமா"..? -என்று வாஜ்பாயிடம் கேள்வி எழுப்பினர்...

வாஜ்பாய் - "நான் எதிர்க்கட்சித் தலைவராக இங்குவரவில்லை... இந்தியாவின் தலைமைப் பிரதிநிதியாக வந்துள்ளேன்... ஏற்கனவே இங்கு வந்துள்ள இந்திய அமைச்சர்கள் எனக்கு கட்டுப்பட்டவர்கள்... எனது முடிவே இந்தியாவின் முடிவு" - என்று கூறினார்...

வாஜ்பாயின் பத்திரிகைப் பேட்டி வெளியான சில மணி நேரங்களில்... பிரான்சும், பிரிட்டனும் இந்தியாவிற்கு ஆதரவாக நேசக்கரம் நீட்டின... காரணம்.... அவ்விரு நாடுகளிலும் அப்போது தீவிரவாதம் தலைதூக்கியிருந்தது....

அடுத்த நாள்.... இந்தியாவிற்கு எதிராக தான் கொண்டுவந்த மசோதா தோல்வியடைந்து விடுமென்றதை உணர்ந்த அமெரிக்கா... அந்த மசோதாவை வாபஸ் வாங்கியது...

மாபெரும் வெற்றியாளராக இந்தியா திரும்பிய வாஜ்பாயை.... வழக்கத்திற்கு மாறாக... விமான நியைத்திற்கு சென்று இந்திய ஜனாதிபதி வரவேற்றார்....



# "நல்ல நடிகை என்று பேயர் எடுக்கத்தான் ஆசை"

## நடிகை ராஷி கண்ணா

**`இமைக்கா நொடிகள்' படத்தில், அதர்வாவுக்கு ஜோடியாக நடித்து ரசிகர்களின் கவனத்தை கவர்ந்தவர் ராஷி கண்ணா.**

தமிழகத்தில் பெரும் சர்ச்சையை ஏற்படுத்திய 'மெட்ராஸ் கஃபே' படத்தில் ஹீரோயினாக அறிமுகமாகி பின், தெலுங்கு, மலையாள திரைப்படங்களில் தொடர்ந்து நல்ல நடிகை என்று பெயர் எடுத்தவர். இமைக்கா நொடிகள்" படத்தில் சிறிய கேரக்டரில் நடிந்திருந்தாலும், தன் தனி நடிப்பால் முத்திரைப் பதித்த ராஷி கண்ணாவுடன் ஒரு சந்திப்பு:

**♦ சினிமாவில் வாய்ப்பு கிடைத்தது எப்படி?**

"பிறந்து வளர்ந்தது, டெல்லி. பி.ஏ ஆங்கிலம் படிச்சுட்டு, பாம்பேல மாடலிங் பண்ணிக்கிட்டு இருந்தேன். 'மெட்ராஸ் கஃபே' படத்தில் நடிக்க வாய்ப்பு கிடைத்தது. பிறகு தெலுங்கு, மலையாளம்னு பிஸி ஆயிட்டேன். தமிழ்ல இமைக்கா நொடிகளில் கிடைத்த வாய்ப்பை மறக்க முடியாது.

**♦ வேறு என்னென்ன தமிழ்ப் படங்களில் நடித்துக் கொண்டிருக்கிறீர்கள்?**

சித்தார்த் நடிக்கும் 'சைத்தான் கி பச்சா', ஜெயம் ரவியுடன் 'அடங்க மறு', விஷால் நடிக்கும் புதிய படம்னு வரிசையா தமிழ்ப் படங்கள் இருக்கு. தமிழ் சினிமாவுக்கு வந்தது மகிழ்ச்சி!"

**♦ இமைக்கா நொடிகள் பத்தி சொல்லுங்கள்?**

இமைக்கா நொடிகள்' படத்துல காலேஜ் படிக்கிற டிரெடிஷனல் பெண்ணா நடிச்சிருக்கேன். நான் நிஜ வாழ்க்கையில எப்படி இருக்கேனோ, அப்படியே இந்தக் கதாபாத்திரம் அமைஞ்சிருக்கு. தைரியமான, மெச்சூரிட்டி பொண்ணா நடிச்சிருக்கேன்.

இந்தப் படத்துல, நயன்தாரா, விஜய் சேதுபதி, அதர்வா, அனுராக் காஷ்யப்னு அருமையான கலைஞர்கள் இருக்கும்போது, அந்த வாய்ப்பை மறுக்க முடியுமா? மேலும், நான் நினைச்ச மாதிரி என் கேரக்டருக்கும் முக்கியத்துவம் இருந்தது. உடனே ஓகே சொல்லிட்டேன்.

இந்தப் படம் என் மனசுக்கு ரொம்ப பிடிச்சப் படம். இயக்குநர் அஜய் ஞானமுத்துவோட திரைக்கதையில எல்லோருக்கும் முக்கியமான பங்கு இருக்கு.



நயன்தாரா மேடம் படத்துல நாம ஒரு சின்ன கேரக்டர் பண்ணாலே, நமக்கு அது பெரிய ரீச் தரும். விஜய் சேதுபதி, அனுராக் காஷ்யப்னு அனுபவ நடிகர்கள் கூட்டணியோட என் முதல் தமிழ்ப் படம் அமைஞ்சிருக்கிறது, சந்தோஷமா இருக்கு."

**♦ நயன்தாரா பத்தி சொல்லுங்கள்?**

'இமைக்கா நொடிகள்' படத்துல எனக்கும் நயன்தாராவுக்குமான காட்சி எதுவும் இல்லை. இதுவரை அவங்களை நான் சந்திச்சதும் இல்லை. ஆனா, அவங்களைப் பத்தி மத்தவங்க சொல்லக் கேட்டிருக்கேன். நயன்தாரா வளர்ச்சியைப் பார்த்து, ஒரு பெண்ணா ரொம்பவும் பெருமைப்படுறேன்.

ஆணுக்குச் சரிசமமான இடம் பெண்ணுக்கும் வேணும்னு நினைக்கிறவ நான். நயன்தாரா செஞ்ச விஷயம் சாதாரணமானது இல்லை. இந்த இடத்தைப் பிடிக்க அவங்க ரொம்பவே கஷ்டப்பட்டிருப்பாங்க. ஒரு நடிகரை அல்லது நடிகையை

மக்கள் எல்லோருக்கும் பிடிச்சுப் போறது அவ்வளவு சாதாரண காரியம் கிடையாது.

♦ **தமிழில் நீங்க நடிக்கிற மற்ற படங்களைப் பற்றி சொல்லுங்கள்?**

'சைத்தான் கி பச்சா' படத்துல கமர்ஷியல் ஹீரோயின். ஜாலியா சுத்துற பப்லி பொண்ணு. 'அடங்க மறு' படத்துல ஜெயம் ரவி மாதிரியே என் கேரக்டரையும் டிசைன் பண்ணியிருக்காங்க. எல்லோருக்கும் உதவுற பொண்ணா இந்தப் படத்துல நடிச்சிருக்கேன்."



♦ **தமிழ் நல்லா தெரியுமா?**

''எனக்குத் தமிழ் ரொம்பப் புதுசுதான். இப்போதான் கத்துக்க ஆரம்பிச்சிருக்கேன். நிறைய தமிழ் பாடல்கள் கேட்குறேன். பேச முயற்சி பண்றேன். இதுவரை, அடிக்கடி பயன்படுத்துற 'எப்படி இருக்கீங்க', 'சாப்டீங்களா'னு சில வார்த்தைகளைக் கத்துக்கிட்டேன். என் உச்சரிப்பு நல்லா இருக்குனு இயக்குநர்கள் சொன்னாங்க. கூடிய சீக்கிரம் எனக்கு நானே டப்பிங் பேசுவேன். ஏன்னா, மொழியைப் புரிஞ்சு கத்துக்கிட்டாதான், அந்தக் கேரக்டருக்கு நியாயம் சேர்க்க முடியும்னு நம்புறேன்."

♦ **தமிழில் முதல் இடத்துக்கு வரும் ஆசை இருக்கா?**

''எனக்கு முதல் இடம், இரண்டாம் இடம்... இதுல எல்லாம் நம்பிக்கை இல்லை. தமிழ் படங்கள்ல நடிக்கணும்னு ஆசைப்பட்டேன், நாலு படங்கள்ல நடிச்சுக்கிட்டு இருக்கேன். கடினமா உழைச்சாலே போதும், நல்ல நடிகைனு பெயர் வாங்கலாம். நான் நடிச்ச கேரக்டர் மக்கள் மனசுல நின்னாப் போதும்.

♦ **எந்த மாதிரியான படங்களில் நடிக்க பிடிக்கும்?**

''எனக்கு எல்லாவிதமான படங்கள்லேயும் நடிக்கணும். நடிப்புக்கு ஸ்கோப் இருக்கிற நல்ல படங்கள் எல்லாத்திலும் நடிக்கணும்னு ஆசைப்படுறேன். 'நடிகையர் திலகம்' படத்துல கீர்த்தி சுரேஷ் ரொம்ப நல்லா நடிச்சிருந்தாங்க. எனக்கு அந்த மாதிரி கேரக்டர்களும் பண்ணணும்னு ஆசை."

♦ **தெலுங்கு, மலையாளம், தமிழ்னு ஒரு ரவுண்ட் வந்தாச்சி. அடுத்தது பாலிவுட்தானா?**

"எனக்கு எதிர்பாராத விதமாதான் சினிமா வாய்ப்பு வந்தது. முதல் இந்திப் படத்தைத் தொடர்ந்து எனக்கு நிறைய தெலுங்கு வாய்ப்புகள் வந்தன. தெலுங்குல நடிச்சுக்கிட்டு இருக்கும்போது தமிழ் மற்றும் மலையாளப் படங்கள்ல நடிக்க சான்ஸ் கிடைச்சது. இதெல்லாம் பிளான் பண்ணிப் பண்ணது கிடையாது. எந்த மொழியா இருந்தாலும், நடிக்கிற படங்கள் நல்ல சினிமாவா இருந்தாப் போதும்!"

♦ **உங்களுக்கு பிடிக்காத விஷயம் எது?**

*கிசுகிசு தான். நான் நடிக்கிறேன், ஷூட்டிங் முடிஞ்சதும் குடும்பத்தோட நேரத்தைச் செலவழிக்கிறேன். என்னை ஒரு கிரிக்கெட் வீரரோடு சம்பந்தப்படுத்தி எழுதியிருந்தாங்க. அவரை நான் பார்த்ததுகூட இல்லை.

♦ **`சமூக வலைத்தளங்களைப் பற்றி என்ன நினைக்கிறீ□ர்கள்?**

''இன்னைக்கு சமூக வலைதளங்கள்தாம் பெரிய மக்கள் தொடர்பு ஊடகமா இருக்கு. என்னை ஒரு நடிகையா ஃபாலோ பண்றவங்க, நான் சொல்ற விஷயங்களையும் ஃபாலோ பண்ண வாய்ப்பு இருக்கு.

கடந்த வருடம் நான் ட்விட்டர்ல சேர்ந்தேன். என் மூலமா ஏதோ ஒரு விழிப்பு உணர்வு கிடைச்சா சரினு என் கருத்துகளை ஷேர் பண்ணிக்கிறேன். அது யாருடைய வாழ்க்கையிலாவது சின்ன மாற்றத்தைக் கொடுத்தா சந்தோஷம்தான்."

♦ **வழக்கமான கேள்வி தான். சினிமாவுக்கு வரலலைன்னா நீங்க என்னவாகியிருப்பீங்க?**

நான் நடிகை ஆவேன்னு எதிர்பார்க்கலை. சின்ன வயசுல இருந்தே ஐ.ஏ.எஸ் ஆகணும்னுதான் ஆசைப்பட்டேன். திடீர்னு கிடைச்சதுதான், சினிமா வாய்ப்பு. நான் நடிச்சே ஆகணும்ங்கிற ஆர்வமும், கட்டாயமும் எனக்கு இருந்ததில்லை. வாய்ப்பு கிடைத்தது. நடிகையாகி விட்டேன்.

●



# “என்னை எழுத்தாளர் என்று சொல்லாதீர்கள்”

## மனம் திறக்கும் ஜோ.டி.குரூஸ்

■ மகிழினி



**உறங்கிக் கொண்டிருந்த இலக்கியத்தின் ஒரு பகுதியில், சட்டென தண்ணீர் தெளித்து விட்டவர், ஜோ.டி.குரூஸ். இதுவரை தமிழ் சமூகத்துக்கு பெரிய அளவில் பரிச்சயமில்லாத மீனவர்களின் வாழ்வை, வலியும் மகிழ்வுமாக பதிவு செய்தவர். இவருடையே வாழ்வே ஆச்சர்யமாக இருக்கும்.**

பன்னாட்டு கப்பல் நிறுவனத்தில் உயர் அதிகாரியாக பணிபுரியும் இவர், கோட்டும் சூட்டுமாக உலகம் முழுவதும் சுற்றி வருவார். ஓய்வு கிடைக்கும் நாளில், கைலியை கட்டிக் கொண்டு கடலில் இறங்கி விடுவார். இதற்கு முன், புனைவு இலக்கியம் பக்கம் திரும்பியிராத இவர், “ஆழி சூழ் உலகு” புத்தகம் எழுதியபோது, மொத்த தமிழ் இலக்கிய உலகமும் இவருடைய எழுத்தைக் கண்டு மிரண்டது. வாரி அணைத்துக் கொண்டது.

அடுத்த படைப்பான “கொற்கை”க்கு சாகித்ய அகாடமி விருது கிடைத்தது. கட்டுரை மற்றும் ஆய்வுகளில் கடற்கரை வாழ்க்கை குறித்து பலரும் எழுதி இருந்தாலும், புனைவுகளின் எண்ணிக்கை மிகச் சொற்பமாகவே இருந்தது. இன்று இவரைப் பின்பற்றி பலரும் எழுதத் துவங்கி இருப்பது நல்ல தொடக்கம். மனம் திறந்து பேசுகிறார். வார்த்தைகளில் கடல் காற்று.



**♦ எழுத்தாளர்கள் முதன் முயற்சியாக, பெரும்பாலும் கவிதை வடிவத்தைத் தான் கையில் எடுப்பார்கள். நீங்கள் எடுத்தவுடன் எப்படி நாவலுக்குள் போனீர்கள்? அதுவும் இவ்வளவு நுட்பமான வடிவத்துக்குள்?**

நானும் கவிதைத் தொகுப்பு வெளியிட வேண்டும் என்ற எண்ணத்தில் தான் தமிழினி பதிப்பக வசந்தகுமாரை சந்திக்கச் சென்றேன். அவரை சுற்றி இருந்த இலக்கியவாதிகள் கேலி பேசினர். என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அவர்களை பழி வாங்க வேண்டும் என்று நினைத்தேன்.

வசந்தகுமார் தான் என்னை வழிப்படுத்தினார். நீங்கள் பழிவாங்குவதை இலக்கியத்தின் மூலம் செய்யுங்கள். அது தான் சரியானது என்றார். பின், ப.சிங்காரத்தின், “ புயலிலே ஒரு தோணி” புத்தகத்தை அளித்தார். நான் உடனே படித்து முடித்து விட்டேன்.

“உங்களுக்கு தெரிந்த, நீங்கள் வாழ்ந்த கடற்கரை வாழ்வை அப்படியே பதிவு செய்யுங்கள். உண்மையாக பதிவு செய்தாலும் அதுவே இலக்கியத்துக்கு நீங்கள் செய்யும் பெரும் காரியம்; சரியான பழிவாங்கல்” என்றார். நான் எழுதத் துவங்கினேன். எனக்குள் ஏதோ ஒருவித வெறி வந்து ஒட்டிக் கொண்டது. ஆண்டாண்டு காலமாக இதுவரை எழுதாமல் இருந்த எங்கள் வாழ்வை, எப்படியாவது எழுதி விட வேண்டும் என துடித்தேன். வேலை நேரங்களைத் தவிர்த்து கொஞ்சம் ஓய்வு கிடைத்தால் கூட எழுதத் துவங்கி விடுவேன். ஏறக்குறைய ஆயிரம் பக்கங்களாவது எழுதி இருப்பேன்.

வசந்தக்குமார், அதை இரண்டு முறை எடிட் செய்தார். வெளியிட்ட உடன் பெரிய எதிர்பார்ப்பு ஏற்பட்டது. எல்லா இலக்கியக் கூட்டங்களிலும் பேசப்பட்டது. பல விருதுகள் கிடைத்தன.

- **அதே புத்தகம் உங்களை ஊருக்குள் நுழைய விடாமல் தடுத்து வைக்கப்பட்டதற்கு காரணமாக இருந்தது வேதனையாக இருந்ததா?**

நிச்சயம் இருந்தது. இப்போதும் நான் கிறிஸ்தவன். அதில் எந்த மாற்றுக்கருத்தும் இல்லை. ஆனால், என்னுடைய முன்னோர்களை பற்றி அறியாமல், கட்டுக்கதைகளை நம்பி மத துவேசம் செய்வதை எப்படி பொறுத்துக் கொள்வீர்கள்? தாய் மீனாட்சி தான் எங்கள் முன்னோர். மீன் ஆட்சி செய்த நிலம், அவளுடைய நிலம். மீனாட்சியை வழிபடவும் திருநீர் இட்டுக் கொள்ளவும் எங்களுக்கு எல்லா உரிமையும் இருக்கிறது.

இதை அறியாத உள்ளூர் கத்தோலிக்க பாதிரியார்கள் எனக்கு எதிராக எல்லாவற்றையும் திருப்பி விட்டார்கள். நான் மீனவர்களின் வாழ்வை தவறாக எழுதி இருக்கிறேன் என்று புரளியை கிளப்பி விட்டார்கள். இப்போது மக்கள் உண்மையை புரிந்து விட்டனர். கேள்வி கேட்பது என் உரிமை. தென்மாவட்ட கடலோரங்களில் வாழும் பெரும்பாலான மீனவர்கள் கிறிஸ்தவர்கள். இலங்கை கடற்படையால் கிறிஸ்தவ மீனவர்கள் சுட்டுக் கொல்லப்படும்போது, வாடிகன் கண்டித்திருக்க வேண்டுமா இல்லையா? அவர்கள் கண்டிக்கவில்லை. அதை நான் கண்டித்தேன். உண்மையை எப்போதும் உரத்து பேசிக் கொண்டிருப்பேன்.

- **சாகித்ய அகாடமி விருது வாங்கி இருந்தாலும், இலக்கிய கூட்டங்களில் உங்களைப் பார்க்கவே முடியவில்லையே?**

நான் இதுவரை என்னை இலக்கியவாதியாக உணரவே இல்லை. ஒரு முறை ஒரு கூட்டத்தில் என் அருகில் இருந்த எழுத்தாளர், பின்நவீனத்துவம் பற்றி என்ன நினைக்கிறீர்கள் என்று கேட்டார். எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. எனக்கு அதுகுறித்து எதுவும் தெரியாது; எனக்கு தெரிந்ததெல்லாம் அனுபவமும் மக்களும் தான் என்றேன்.

எனக்கு சாகித்ய அகாடமி விருது கொடுத்ததில் இருந்து எனக்கு ரொம்ப கூச்சம். ஏனெனில், இங்கு திறமையான பல எழுத்தாளர்கள் இருக்கிறார்கள். அவர்களுக்கு கொடுக்காமல் எனக்கு கொடுத்திருக்கிறார்களே என்று எனக்கு நானே கூச்சப்பட்டிருக்கிறேன். குழு அரசியலையும் நான் வெறுக்கிறேன். ஆழி சூழ் உலகு தமிழினியில் இருந்து





வந்தது. கொற்கை காலச்சுவடில் இருந்து வந்தது. இப்படி எந்த வட்டத்திலும் சிக்கக் கூடாது என்பதில் தெளிவாக இருக்கிறேன்.

- **மோடியோடு இணைந்து தேர்தல் பிரச்சார மேடையில் ஏறினீர்கள். எதிர்காலத்தில் அரசியலில் இறங்கும் ஆசை உண்டா?**

இங்கே நிறைய அரசியல் இருக்கிறது. கட்சி அரசியல் தான் பொது அரசியல் என்று நினைக்கின்றனர். எல்லாவற்றிலும் எங்கிலும் அரசியல் இருக்கிறது. குளச்சல் சைமன், கொட்டில்பாடு துரைசாமி, தூத்துக்குடி குருஸ் பர்னாந்து, ஜே. எல். பி. ரோச், தியாகி. பெஞ்சமின், பொன்னுசாமி வில்லவராயர், ஜி. ஆர். எட்மண்ட், என். ஜீவரத்தினம், கே. சுப்பிரமணியம், எடப்பாடி சின்னாண்டி பக்தர், மூக்கையூர் குழந்தைசாமி இவர்கள் எல்லாம் யார் என்று பொதுச் சமூகத்துக்கு தெரியுமா? மீனவர்களுக்காக உழைத்தவர்கள். தங்கள் உயிரை நீத்தவர்கள். மீனவர்களின் ஒற்றுமை அரசியல் வழியாகத் தான் நிகழும் என்றால், அதில் நான் இறங்கவும் தயார்.

- **உங்களைத் தொடர்ந்து கடல்புற மக்களின் வாழ்க்கையை அடுத்தடுத்த எழுத்தாளர்கள் பதிவு செய்து வருவதை பார்க்கிறீர்களா?**

எனக்கு முன்னோர்கள் இருந்தார்கள். அரசியலில் மட்டும் அல்ல, இலக்கியத்தில் மீனவர்களின் வாழ்வை எழுதி எல்லோரையும் திரும்பிப் பார்க்க வைத்தவர், வார்த்தைச் சித்தர் வலம்புரிஜான். இப்போது, வறீதையா கான்ஸ்தந்தீன், குரும்பாறை சி. பெர்லின், ஜஸ்டின் திவாகர், அனிதன், அண்டோ, சிறில் அலெக்ஸ், ஜான் பிரபு, தோ. மா. ஜான்சன், கிறிஸ்டோபர் ஆனி, சிஸ்டர் டெனியா போன்றோர் ஆழமாகவும் தெளிவாகவும் எழுதுகிறார்கள். படிக்கும்போது சந்தோஷமாக இருக்கிறது.

- **மீனவ இனக்குழுவில் இருக்கும் வன்முறை எண்ணத்தை அறவே ஒழிக்க உடனடித் தேவை என்ன?**





சங்க இலக்கியத்தில் பரதவர் என்ற இனக்குழு தான் குறிப்பிடப்பட்டது. இப்போது, அந்த இனம், பரவர், பர்வதராஜர், செம்படவர், ஓடக்காரர், முக்குவர், நுழையர், பட்டங்கட்டி, வலயர், வலைஞர், கடையர், அம்பலக்காரர், கரையர், முத்தரயர், செட்டி, நாட்டார், பட்டினவர், பள்ளி, மரைக்காயர், வருணகுல முதலி என பல இனக்குழுவாக விரிந்தும் பிரிந்தும் இருக்கிறது.

மீனவர்கள் அடிப்படையில் வேட்டையாடிக்குழு என்பதால் எல்லோருக்கும் தாங்களே கடலுக்கே ராஜா என்ற எண்ணம் வந்து விடுகிறது. அந்த நினைப்பினால் பல பிரச்சனைகள் ஏற்படுகிறது. கல்வி இல்லை. அரசியல் விழிப்புணர்வும் இல்லாததால் இந்த இனக்குழு பல பிரச்சனைகளை நாள்தோறும் சந்தித்து வருகிறது. இவர்களில் ஒரு சிலர் இந்தத் தொழிலே வேண்டாம் என்று வெளியேறுகின்றனர். இவர்களுக்குள் ஒற்றுமையை ஏற்படுத்த வேண்டியது, அடிப்படைக் கடமை.

- **மத்திய அரசுக்கு மீனவர்கள் தொடர்பாக பல்வேறு திட்டங்களை முன் வைத்தீர்களே.. என்ன அது?**

நம் நாட்டில் உள்ள கடற்கரையின் நீளம் 8,118 கி.மீ. இந்தக் கடலும் அதன் கரையும் நமக்கு கிடைத்திருக்கும் பெரிய பொக்கிஷம். இங்கு என்னென்ன நடக்கிறது, என்னென்ன செல்வங்கள் சூரையாடப்பட்டு இருக்கின்றன என்பது பற்றி, கடற்கரையில் இருக்கும் பணக்காரர்கள் தவிர, வேறு யாருக்கும் தெரியாது.

பேக்வாட்டர் பம்பிங் மூலம், உள்நாட்டில் பெரிய நீர் வழிச்சாலைகளை கூட உருவாக்க முடியும். நிறைய திட்டங்கள் இதில் இருக்கிறது. மீன் உற்பத்தியையும் பொழுதுபோக்கு அம்சங்களையும் இதன் மூலம் பெருக்கலாம். அதில் பல திட்டங்கள் குறித்து பிரதமர் மோடியிடம் மனுவாக கொடுத்தேன்.

- **இவ்வளவு பெரிய பொறுப்பு.. அலுவலக வசதிகள்... கை நிறைய பணம்... இலக்கியத்தில் பல விருதுகள்.. இருந்தும் வடசென்னையில் ஒரு குறுகிய வீட்டில் இருக்கிறீர்களே.. ஏன்?**

மக்களோடு மக்களாக இருப்பது தான் நல்லது. அது தான் மகிழ்வை தருகிறது. வசதி வரும் போகும். எந்த நிலையிலும் நாம் பழையதை மறக்கக் கூடாது. அதனால் தான் மீனவப் பகுதியில் வாழ்கிறேன். இன்னும் எழுத வேண்டிய மீனவர்களின் வாழ்க்கை என் நெஞ்சு நிறைய இருக்கிறது. அதை விரைவில் இறக்கி வைக்க வேண்டும்.

•

# குழந்தைகள் கண் மருத்துவர் டி.எஸ். சுரேந்திரனுக்கு வாழ்நாள் சாதனையாளர் விருது

குழந்தைகள் மருத்துவம் என்பதே, சவால்கள் நிறைந்த ஒன்று. அதிலும் குழந்தைகள் கண் மருத்துவம் என்பது, மிகப்பெரும் சவால்கள் நிறைந்த ஒன்று. காரணம், தான் எப்படி பார்வை எனும் புலனை அனுபவிக்கிறோமோ அப்படியே மற்றவர்களும் அனுபவிக்கிறார்கள் என்றே அவர்கள் நினைத்துக்கொண்டு, கண்பார்வைக் குறையுடனேயே, தங்களது குழந்தைப் பருவத்தை கடந்து கொண்டிருப்பார்கள். அதனை அடையாளம் கண்டு, உரிய சிகிச்சை அளித்து, மழலைப் பருவத்திலேயே அவர்களுக்கு ஒரு நல்ல எதிர்காலத்தை அமைத்துக் கொடுப்பது என்பது, கண் மருத்துவத்துறையில் ஒரு மாபெரும் சாதனையாகும்.

இந்த சாதனையை, கடந்த நாற்பது ஆண்டுகளாக செய்து வருபவர், டாக்டர் டி. எஸ். சுரேந்திரன் என்ற தண்டலம் சுந்தரராஜன் சுரேந்திரன். சென்னை, "சங்கர நேத்ராலயா" கண் மருத்துவ மனையின் துணைத் தலைவராகவும், குழந்தைகள் கண் மருத்துவத்துறையின் இயக்குநராகவும் சேவை புரிந்து வருகிறார்.




இன்று வரை, சுமார் 25,000 குழந்தைகளுக்கான ஆபரேஷன் செய்துள்ள இவர், ஏராளமான விருதுகளுக்குச் சொந்தக்காரர்.

தற்போது, டாக்டர் டி. எஸ். சுரேந்திரனின் இடைவிடாத, 40 வருட கால மருத்துவ சாதனை சேவையைப் பாராட்டி, "வாழ்நாள் சாதனையாளர் விருதினை" புதுவையின் துணை நிலை ஆளுநர் கிரண்பேடி ஐ. பி. எஸ் வழங்கி கௌரவித்தார்.

"இந்த விருதினை சங்கர நேத்ராலயாவின் நிறுவனர், டாக்டர். பத்ரிநாத் மற்றும் அனைத்து ஊழியர்களுக்கும், சங்கர நேத்ராலயாவின் பயனாளிகளுக்கு சமர்ப்பணம் செய்கிறேன்" என்று, தன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொண்டார், டாக்டர் டி.எஸ்.சுரேந்திரன்.

## கணக்கு கவிதை

எம்.ஜி.ஆர். திமுகவில் இருந்தபோது "கணக்கு" என்ற தலைப்பில் கருணாநிதி தலைமையில் கவியரங்கம். எம்.ஜி.ஆர்.கணக்கு கேட்பதாகவும் அமைச்சர் பதவி கேட்பதாகவும் அப்போது ஒரு பேச்சு இருந்தது (அது உண்மையா தெரியாது).

அந்தக் கவியரங்கத்தில் கலைஞர் வாசித்த கவிதையின் ஒரு பகுதி...

கணக்குகள் பலவிதம்
கணக்கு கேட்பவர்கள் பலவிதம்
பாட்டாளி வியர்வையிலே
முதலாளி பார்ப்பதுதான் பணக்கணக்கு
கூட்டாளி தன் அன்புக்குக்
கூலியொன்று கேட்பதுதான் பதவிக் கணக்கு
மந்தையிலே ஆட்டுக் கணக்கு மாட்டுக் கணக்கு
மொந்தையிலே மட்டும் போடாதே கணக்கு

## ஞாபகம் வருதே



இருபதும் பதினெட்டும்
கூட்டிச் சொல்லல் மனக்கணக்கு
இருபது பதினெட்டைக்
கூட்டிச் சொல்லல் காதல் கணக்கு
இரண்டுக்கு மேல் எப்போதும் வேண்டாம்
இது குடும்பக் கட்டுப்பாடு கணக்கு
குசேலனுடன் போட்டியிட்டால்
கொடுமையின் கணக்கு
மான் போட்டக் கணக்குத் தவறென்று
வீழ்த்திட்டது வேங்கை
ஏன் போட்டாய் தப்புக் கணக்கென்று
வேங்கையினை வீழ்த்திட்டான் வேடன்.
இதுதான் உலகு.



# யார் இந்தக் கர்ணன்...!

**கர்ணன்... குந்தி தேவியின் மூத்த மகன்.. பாண்டவர்களுக்கு தமையன்.. கொடை உள்ளம் கொண்டவன்... கவசத்தை தானமாகத் தந்தால் உயிருக்கு ஆபத்து என்று அறிந்தும் யாசித்து வந்தவருக்கு தனது கவசத்தையே தானமாக அளித்த கொடை உள்ளம் கொண்டவன்.**

இவ்வளவு நல்ல உள்ளம் கொண்ட கர்ணனுக்கு, ஏன் இவ்வளவு சோதனைகள்? கர்ணன் நல்லவனாக இருந்தாலும், அவருக்கு நேர்ந்த அத்தனை சோதனைகளுக்கும் காரணம், அவரது பூர்வ ஜென்மமே!

**கர்ணனின் கர்மா**

கர்ணன், பூர்வ ஜென்மத்தில் தானா சூரன் என்னும் அரக்கனாக பிறந்திருந்தான். தானா சூரன், சாகா வரம் வேண்டி சிவனை நோக்கி கடும் தவம் புரிந்தான் . அவனது தவத்தைக் கண்டு மனம் உருகிய சிவபெருமான், "எந்த ஒரு பிறப்பிற்கும் மரணமில்லா வரம் என்பது சாத்தியமல்ல. எனவே, வேறுவரம் கேள்" என்றார். (வேறு சிலர், பிரம்ம தேவரை நோக்கி தவம் புரிந்ததாக கூறுகின்றனர்).

உடனே, தானா சூரன், "யாராலும் என்னைதாக்க முடியாத அளவிற்கு ஆயிரம் உயிர் கவசமும் குண்டலமும் அருள வேண்டும். இந்த வரத்தின் படி, சரீரத்தில் ஆயிரம் சட்டைகளால் போர்த்தப்பட்டிருக்கும் என்னை,



அந்த ஆயிரம் சட்டைகளை நீக்காமல், எவராலும் கொல்ல முடியாது. என்னைத் தாக்க விரும்பும் வீரன், 12 வருடங்கள் தவமிருந்து பின்னர், 12 வருடங்கள் என்னுடன் தொடர்ந்து போர் புரிந்தால், ஆயிரம் கவசங்களுள் ஒன்றை அறுக்க முடியும்.

இவ்வாறு, 24 வருடங்கள் வீதம், தவமும் போரும் செய்து, ஆயிரம் கவசங்களை ஒன்றன்பின் ஒன்றாக அறுத்தெறிந்தால், தானா சூரன்னாகிய என்னை கொல்ல முடியும்" என்று வரம் வேண்டி, அதை சிவ பெருமானும் அருளினார். அன்று முதல், தானா சூரன், சஹசர கவசன் என்றழைக்கப்பட்டான் (சஹசரக்கவசன் என்றால் ஆயிரம் கவசங்கள் உடையவன் என்று பொருள்)

சிவ பெருமானிடமே, வரம் பெற்ற சஹசரக் கவசனுக்கு அகந்தை தலைக்கேறியது. தேவர்களையும், மனிதர்களையும் துன்புறுத்த துவங்கினான்.

இந்திரனின் தலைமையில், தேவர்களும், மனிதர்களும் ஸ்ரீ நாராயணிடம் சரணடைந்தனர். மறுகணமே, நாராயணனின் கையில் இருந்த சக்கரத்தை ஏவினார். தலைதெரிக்க ஓடினான் சஹசரக் கவசன். ஸ்ரீ நாராயணனின் சக்கரம் சஹசரக் கவசனின் குண்டலங்களை ஒவ்வொன்றாக அறுத்தெறிந்தது. குண்டலங்கள் ஒவ்வொன்றாக அறுத்தெறிந்ததால், சஹசரக் கவசனின் பலமும் குறைந்தது.

இப்படியாக, 999 கவசக் குண்டலங்களை இழந்த சஹசரக் கவசன், சிவ பெருமானை சரணடைந்தான். தானா சூரனிடம் உன்னை விரட்டி வருவது சுதர்சன சக்கரம் காலத்தின் சக்கரம். காலத்தின் அதிபதி கதிரவன். எனவே, கதிரவனிடம் அடைக்கலம் அடையச் சொன்னார் சிவப்பெருமான். தானா சூரனும் கதிரவனிடம் நாடினார்.

"அடைக்கலம் தேடி, உலகையே காக்கும்

மும்மூர்த்திகளிடம் செல்லாமல், ஏன் என்னிடம் வந்தாய்" என்றார், சூரிய பகவான். "சிவப்பெருமான் தான், தங்களிடம் செல்ல கூறினார். தாங்கள் எனக்கு அடைக்கலம் அளிப்பதாக வாக்களித்தால் மட்டுமே, எல்லாவற்றையும் கூறுவேன்" என்றான், சஹஸ்ர கவசன். சூரிய பகவானும் வாக்களித்தார்.

உடனே, தனக்கு சிவபெருமானிடம் இருந்துக் கிடைத்த வரத்தை பற்றியும், அதன் விளைவுகளையும், தன்னை வதம் புரிய சுதர்சன சக்கரம் துரத்துவதையும் சூரிய பகவானிடம் விவரித்தான் சஹஸ்ரக் கவசன். இதைக்கேட்டு கதிரவன் "ஐயோ, அசுரனுக்கா அடைக்களம் அளிப்பதாக வாக்களித்தேன்" என்று வருந்தினார். உடனே, தானா சூரனை கோதுமை அளவிற்கு மாற்றி விழுங்கிவிட்டார் சூரிய பகவான்.

கதிரவன் விழுங்கிய அடுத்தக் கணமே, வந்து நின்றது சுதர்சன சக்கரம். வந்தது அசுரன் என்று அறியாமல் காப்பதாக வாக்களித்துவிட்டேன் என்று வருத்தத்துடன் கூறினார் கதிரவன். பேசிக்கொண்டு இருக்கும் போதே, ஸ்ரீ நாராயணன் தோன்றினார்.

"நீ அளித்த வாக்கை காப்பற்ற, அசுரனை அழிக்காமல் விட்டுவிடுகிறேன். துவாபர யுகத்தில் போஜராஜனின் வளர்ப்பு மகளான குந்தி உன்னிடம் குழந்தை வரம் கேட்டு பிரார்த்திப்பாள். அப்போது உன் வயிற்றில் உயிரணுவாக மாறியிருக்கும் தானா சூரனை, அவளுக்கு குழந்தையாக அளித்து விடு. உலகிற்கு பாரபட்சம் இல்லாமல், ஒளியை அருளும் உன் குணம் அவனிடமும் காணப்படும்" என்று கூறி நாராயணன் மறைந்தார்.

போஜராஜனின் வளர்ப்பு மகள் குந்தி தேவியின் சேவையில் மகிழ்ந்த வியாச முனிவர், குழந்தை வரம் தரும் மந்திரத்தை, அவளுக்கு உபதேசித்தார். அதை சோதிக்கும் எண்ணம் கொண்ட குந்தி தேவி, சூரியனை பார்த்து மந்திரத்தை உச்சரிக்க, சூரிய பகவான் வந்து கவசக் குண்டலங்களுடன் கூடிய, குழந்தையை அருளினார்.

கண் திறந்த குந்தியின் கையில் இருக்கக் கண்ட குந்தி, "திருமணம் ஆகாமல் ஒரு குழந்தையா" என்று வருந்தி, ஒரு தங்கப் பேழையில் அக்குழந்தையை வைத்து ஆற்றில் விட, அந்தக் குழந்தையை, பீஷ்மரின் தேரோட்டி ஆற்றில் இருந்து கண்டெடுத்தார்.

அந்த தேரோட்டியும், அவன் மனைவியும், குழந்தை இல்லா தனது துக்கத்தை போக்க வந்த பொக்கிஷமே இக்குழந்தை என



எண்ணி வளர்த்தனர். அந்தக் குழந்தையே சூரியபுத்திரன் கர்ணன்.

சஹஸ்ரக் கவசனின், கவச வதத்தைப் பற்றி வேறு விதமாகவும் கூறப்படுகிறது. சஹஸ்ரக் கவசனின் கொடுமைத் தாங்காமல் ஸ்ரீ நாராயணனிடம் தேவர்களும் மனிதர்களும் அடைக்கலம் அடைந்தப் பிறகு, ஸ்ரீ நாராயணன், நர நாராயணர்களாக அவதரித்தார்.

ஸஹஸ்ர கவசனை ஸம்ஹரிப்பதற்கு அவர்கள் கூட்டு முயற்சி செய்தனர். நரன் 12 வருடங்கள் தவம் புரிய, நாராயணர் அசுரனுடன் போர் புரிந்து கவசமொன்றை அறுத்துத் தள்ளினார். இப்படிப் பல வருடங்கள் விடா முயற்சி செய்து, 999 கவசங்களை அறுத்து எறிந்தனர்.

இவர்களுக்குள் நடந்த போரினால் பிரம்ம பிரளயமே வந்து விட்டது. அதன் பிறகு மேற்கூறியது போல் எஞ்சி நின்ற ஒரு கவசத்துடன் சஹஸ்ர கவசன் சூரிய லோகம் போய் அடைக்கலம் அடைந்தான். அடுத்த ஜென்மத்தில் சூர்ய புத்திரனாக கர்ணன் என்ற பெயரில் மீதமுள்ள (பூர்வ ஜென்மகவசம்) ஒரு கவசத்தோடு பிறப்பெடுத்தான்.

சஹஸ்ரக் கவசனின் கர்ம வினையை தீர்க்கவே மகாவிஷ்ணு நர ரூபத்தில் அர்ஜுனனாகவும், நாராயண அம்சத்தில் கிருஷ்ணனாகவும் அவதரித்தார்.

12 ஆண்டுகள், பாண்டவர்கள் வனவாசம் செய்தது, அந்த நரனுடைய 12 வருடத் தவமேயாகும். ஒரு கவசத்தை இந்திரன் மூலம் நீங்கியதால்தான் அர்ஜுனன் கர்ணனை கொல்ல முடிந்தது. கர்ம வினை என்பது, நாம் புரியும் நல் வினைகளையும், தீய வினைகளையும் சார்ந்தே அமையும். இப்பூவுலகில் நாம் வாழும் காலம் வரை அகந்தையை தவிர்த்து, நல்லெண்ணங்களுடன் வாழ்வதே மனித குலத்திற்கு நன்மையை பயப்பதோடு நல்ல கர்ம வினைகளை விதைக்கும்...









# விளம்பரம் எடுக்கிறியா? விவாகரத்து வாங்கித் தரீயா?





நறுமுகை

**ஓடும் படத்துக்கு மத்தியில் விளம்பரம் வந்த காலம் மலையேறி விட்டது. இப்போது, விளம்பரங்களுக்கு மத்தியில் தான் படமே ஓடிக் கொண்டிருக்கிறது. தியேட்டரில் மிஸ் பண்ணிய படத்தை இங்காவது பார்த்து விடலாம் என்று டிவி முன்னாடி உட்கார்ந்தால் போதும்.**

உங்கள் மூளையில் மூன்று இஞ்ச் ஆணி அடித்தது போல் ஆகி விடும். அதுவும் விளம்பரங்கள் செய்யும் அட்டூழியங்கள் வார்த்தைகளில் விவரிக்க முடியாதது. குழந்தை கக்கா போனால் கழுவி விடுவதில் இருந்து காலம் போன காலத்தில் எந்த முதியோர் இல்லத்தில் சேர்வது வரை எல்லாவற்றையும் தெளிய தெளிய வைத்து அடிப்பார்கள்.

வீட்டில் கூட நிம்மதியாக இருக்க முடியாது. கொஞ்சம் காத்தாட வெளியில் உலாவிக் கொண்டே பல் விளக்கலாம் என்றால், உங்கள் டூத் பேஸ்ட்டில் உப்பு இருக்கா? மிளகாய் இருக்கா? புளி இருக்கா என்று ஏதாவது ஒரு நடிகை மைக்கை எடுத்துக் கொண்டு வந்து விடுகிறாள். பாத்ரூம் போனால் கூட டிரஸோடு குளிக்க வேண்டி இருக்கிறது. எந்த நடிகன் எதைத் தூக்கிக் கொண்டு வருவான் என தெரியவில்லை. அந்தளவுக்கு நிலைமை கெட்டுக் கிடக்கிறது.

அன்று வீட்டில் விருந்து. ஞாயிற்றுக்கிழமை வேறு. வீட்டில் எல்லோரும் மொத்தமாக அமர்ந்து பாத்திரங்கள் வரும் வரை எதற்கு காத்திருக்க வேண்டும் என்று எண்ணி, டிவியை ஆன் பண்ணினோம். எடுத்தவுடனே பிரபல நடிகர் ஒருவர் ஒவ்வொரு வீட்டுக்கும் வந்து பாத்ரூமை சுத்தம் செய்து கொண்டிருந்தார்.

அதுவும் எடுத்தவுடனே, பாத்ரூம் டாய்லெட்டில் உள்ள அசுத்தமான கறைகள். சாப்பிட உட்கார்ந்தவர்கள் சனியனை நடுவீட்டில் கொண்டு வந்ததே தப்பு, இதில் புலம்பல் எதற்கு என அடுத்த சேனலை தாவினால் பற்பசை விளம்பரப்பரத்துக்காக மொத்த பல்லையும் காட்டினார்கள். மஞ்சள் கறை, ஈறுகளின் அழுக்கு... கொஞ்சம் யோசித்துப் பாருங்கள், அந்த நாளில் உள்ளே போன ஒவ்வொரு கவளமும் குமட்டிக் கொண்டே சென்றது.

"ஐஸ்வர்யம் பெருகும்" என்று பிரபு சொல்கிறார் என நம்பி நகை வாங்கினால், "அம்மா சொல்றேன் நம்புங்க" என கே.ஆர்.விஜயா அடமானம் வைக்க சொல்கிறார். அவர் பேச்சைக் கேட்டு அடமானம் வைத்தால், "அடமானம் வைத்த உங்க நகைகளை நாங்க மீட்டுத் தரோம்" என்று ராதிகா வருகிறார். அவரை நம்பி அடமானம் வைத்ததை மீட்டெடுத்தால், "தொழில் துவங்கிறதுக்கு நாங்க பணம் தாரோம்; நீங்க நகையை தாங்க" என விக்ரம் வாங்கிக் கொள்கிறார்.

"உங்க தங்க நகையை அன்றைய விலைக்கே வாங்கிக் கொள்கிறோம்"னு நகையை விக்க சொல்ற அடுத்த விளம்பரம் நம்மை திகில் ஆக்குகிறது. நீங்களே சொல்லுங்கள். வாங்கிய நகையை ஒரு இடத்தில் வைக்க முடிகிறதா?

தங்கம் வந்தால் வீடு வளமாக இருக்கும் என்பது பொருளாதார நடைமுறை. ஆனால், அதே தங்கத்தால் நாசமான குடும்பங்கள் ஏராளம். நகைகள் பற்றி பெண்களுக்கு சொல்லவா










வேண்டும்? எப்போதும் நகை வேண்டும் என்று நச்சரிக்கும் மனைவிகளை தூண்டி விட்டு, உதை வாங்க வைப்பது இங்குள்ள நகைக்கடை விளம்பரங்கள்.

ஒரு நாளைக்கு இரண்டு மூன்று முறை விளம்பரம் வந்தால் கூட சேனலை மாற்றிக் கொள்ளலாம் அல்லது டிவி முன்பு நின்று கொண்டு கவனத்தை திசை திருப்பலாம். எந்த சேனலை திருப்பினாலும் ஐந்து நிமிடத்துக்கு ஒரு முறை வந்து குவியும் நகைக்கடை விளம்பரங்களில் இருந்து எப்படி தப்பிப்பது? வாரத்துக்கு ஒரு முறை மருத்துவமனையில் வெள்ளை முண்டாசு கட்டுவதைத் தவிர வேறு வழியில்லை.

சரி அதை விடுங்கள். மார்க்கெட்டில் இல்லாத நடிகர்கள் வேறு வழியில்லாமல், விளம்பரப் படத்தில் வந்து டார்ச்சர் பண்ணுகிறார்கள் என்று கூட மன்னித்து விடலாம். இப்போது கடையின் ஓனர்களும் வந்து அழிச்சாட்டியம் செய்கிறார்கள். ஏதோ ஒரு மூலையில் பாத்திரமாக வந்து போனதெல்லாம் மாறி, இப்போது கூட்டமாக வந்து கும்மியடிக்கிறார்கள்.

எந்த சேனலை திறந்தாலும், முன்னாடி வந்து பயமுறுத்துகிறார்கள். அதுவும் கனவுக்கன்னியாக இருந்த நடிகைகளோடு ஆடுவது, புண்பட்ட நெஞ்சில், மிளகாய் பொடி அப்பியது மாதிரி இருக்கிறது. வேறு வழியில்லாமல், அதை கூட தாங்கிக் கொள்ளலாம்.

ஆனால், டான்ஸ் என்ற பெயரில் அவர்கள் அடிக்கும் கூத்து இருக்கிறதே... இரண்டு விநாடி உத்துப் பார்த்தால் கண் ரெண்டும் அவிந்து போய் விடும். பணம் பத்தும் செய்யும் என்பது வாஸ்தவம் தான். இந்த விஷயத்தில் பதினைந்தையும் செய்திருக்கிறது.

எல்லாவற்றையும் தாண்டி, படுக்கை அறை காட்சிகளை கொஞ்சம் கூட சென்சார் செய்யாமல் காண்டம் விளம்பரம் என்ற பெயரில் வியாபாரம் பண்ணுவதைப் பார்த்தால் காண்டாகிறது. காபி குடிக்கும் போது மாதவிடாய் விளம்பரங்கள், சாப்பிடும் போது பாத்ரூம் விளம்பரங்கள், ஸ்நாக்ஸ் சாப்பிடும் போது, காண்டம் விளம்பரங்கள் என விதவித ரூபங்களில் வந்து உயிரை வாங்குகிறார்கள்.

டிவியில் தான் வம்பிழுக்கிறார்கள் என ஆப் பண்ணி விட்டு, யூடியூப்புக்குப் போனால், வீடியோ ஓடிக் கொண்டிருக்கிற போதே, இடையில் வந்து உயிரை வாங்குகிறார்கள்.

சித்ரா ஆன்ட்டி தொல்லைகளில் இருந்து தப்பிக்க டிவிக்கு வந்தால், இவர்களின் தொல்லை பெரும் அக்கப் போராக இருக்கிறது. எதில் இருந்தும் தப்பிக்க முடியவில்லை.

டிவி, பேஸ்புக், வாட்ஸ்ஆப் குரூப் என திரும்பும் திசை எல்லாம் திணற திணற விரட்டுகிறார்கள். மெயில் அனுப்பச் சென்றால், அங்கும் இவர்களின் அநியாயம் தாங்கவில்லை.

இந்த மொத்த தொல்லைகளில் இருந்து தப்பிக்கலாம் என்று காட்டுக்குச் சென்றால், அங்கும் ஓனர்களின் முகங்கள் விளம்பர பலகைகளாக தொங்குகின்றன. இது, விடாது கறுப்பு. பழகிக் கொள்வதைத் தவிர வேறு வழி இல்லை.



■ சஹாரா சுப்புராஜூ

# "வீடியோ" போர்

**ஒரு சிலர் செய்யும் தவறுகள், இரு நாடுகளுக்குள்ளும், இரு சமூகத்தினருக்கும், இரு இனங்களுக்கிடையேயும் மிகப் பெரிய பிரச்சனைகளை உருவாக்கி இருக்கிறது என்பதை வரலாறு நமக்கு உணர்த்தி இருக்கிறது.**

**அந்த தவறு மீண்டும் நடந்து, பெரிய பிரச்சனையாக மாற இருந்த நேரத்தில், விழித்துக் கொண்ட அரசு இயந்திரத்தால் தடுக்கப்பட்டிருக்கிறது.**

*கடவுளின் தேசம் என்று அழைக்கப்பட்ட கேரளா, கடந்த ஆகஸ்ட் மாதம் பெய்த அசாதாரணமான மழை காரணமாக பெரும் பாதிப்பை சந்தித்தது. இதில் 373 பேர் இறந்தனர். 3,14,391 பேர் இடம்பெயர்ந்தனர். கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டுக்கு பிறகு கேரளாவில் ஏற்பட்ட மோசமான வெள்ளம் இது என்று ஆய்வாளர்கள் வர்ணித்தனர்.*

*மாநிலத்தின் 42 அணைகளில் 35 அணைகள் வரலாற்றில் முதன்முறையாக திறக்கப்பட்டன. செறுதொனி அணையின் ஐந்து வாயில்களும் 26 வருட இடைவெளிக்குப் பிறகு ஒரே நேரத்தில் திறக்கப்பட்டன. அதிக மழை காரணமாக மலைசார்ந்த மாவட்டமான வயநாடு தனிமைப்படுத்தப்பட்டது.*



*அதிக மழை காரணமாக நீர் மட்டம் உயர்ந்ததால் கிட்டத்தட்ட எல்லா அணைகளும் திறக்கப்பட்டுள்ளன. தாழ்வானப் பகுதிகளில் வெள்ளம் சூழ்ந்தது. மாநிலத்தின் வரலாற்றில் முதன்முறையாக, அதன் 42 அணைகளில் 35 அணைகள் திறக்கப்பட்டன.*

*இப்படி கேரளா வெள்ளத்தில் மூழ்க.., மற்ற மாநிலங்களோடு சேர்ந்து, தமிழ் நாடும் நிதி திரட்டி அனுப்புவதோடு நிறுத்தாமல், பாதிக்கப்பட்ட பகுதிகளுக்கே போய் இறங்கி உதவி செய்தார்கள்.*

*இப்படி ஒரு பக்கம் இனம், மதம், மொழியை கடந்து கேரளா மக்களை மீட்டெடுக்கும் முயற்சியில் தமிழர்களும் போராடிக் கொண்டு இருக்கும் போது, ஒரு"வீடியோ" வடிவில் அடுத்தததொரு புயல் வீசி, இருமாநிலங்களின் நட்புறவில் வேட்டு வைத்தது.*

*யாரோ ஒரு கேரளப் பெண்ணை காதலித்து, அவளின் பெற்றோரின் சம்மதம் கிடைக்காத, ஆர்வக் கோளாறு இளைஞன் ஒருவன், ''கேரளால வெள்ளம் வந்து எல்லோரும் கஷ்டப்படுறாங்க. அதுக்குதான் சொன்னோம், உங்க ஊருப் பொண்ணுங்களை தமிழ்நாட்டு பசங்களுக்கு கட்டிக் கொடுங்கன்னு..*

*இன்னேரம் கட்டிக்கொடுத்துருந்தா கேரளா பொண்ணுங்கெல்லாம் தமிழ் நாட்டுல பத்திரமா இருந்திருப்பாங்க. டிசம்பர்ல எங்க ஊருல வெள்ளம் வந்தால் நாங்க அங்க வந்து இருந்திருப்போம்''ன்னு சொல்லி ஒரு வீடியோவை வெளியிட, அவ்வளவு தான்... பத்திக்கொண்டது...*

*அந்த இளைஞன் ஆர்வக் கோளாறுலேயோ..இல்ல அறியாமையிலோ இந்த வீடியோவை வெளியிட, கேரள இளம்பெண்களும், பையன்களும்*










பதில் வீடியோவை வெளியிட, அதற்கு பதிலடியாக தமிழ் பசங்களும், பெண்களும் எதிர் வீடியோவை வெளியிட.....இருபரப்பிலும் "வீடியோ" போர் வைரல் ஆனது.

**வீடியோக்களில் சில சாம்பிள்கள்:**

வீடியோவில் ஒரு பொண்ணு என்னாங்குது, "கேரளா சுந்தரிங்களாம் எங்க ஊரு சேட்ட்ன்மார்களுக்குதான்"னு சொல்லுது.

இன்னொரு வீடியோவில் ஒரு பொண்ணு, "உங்களுக்கு தண்ணி இல்லாதப்ப முல்லைப் பெரியார் அணையில் இருந்த்துதான் தண்ணி எடுத்துட்டு போறீங்க. இங்க வெள்ளம் இல்ல, சுனாமியே வந்தாலும் நாங்க எங்க நாட்டுப் பசங்களத்தான் கல்யாணம் பண்ணுவோம். எங்க நாட்டுலேயே நல்ல நல்ல ஆம்பளைங்க இருக்காங்க. அப்புறம் எதுக்கு அடுத்து நாட்டுக்கு போகனும்? நாங்க மலையாளிங்க. பாத்துப் பேசுங்க"- அப்படின்னு ரவுடி மாதிரி கன்னத்தை தடவிக்காட்டுது.

"வெள்ளத்துல எங்க சேட்டன் மார்கள் எல்லாம் தண்ணீர்ல அடுச்சுட்டு போகல. அவங்க எல்லாம் உயிரோடதான் இருக்காங்க. அப்பறம் எதுக்கு நாங்க தமிழ்நாட்டுல இருக்க பசங்கள கல்யாணம் பன்னனும்" னு ஒரு பொண்ணு சொல்லுது...

நர்ஸ் பணியில் இருக்கும் ஒரு பொண்ணு வேலையில் இருக்கும் போதே பாத்ரூமில் இருந்து பேசி, ரெக்கார்டு பண்ணி அனுப்புன வீடியோ அடுத்த லெவல்.

" தமிழ் நாட்டில் இருந்த நிறைய பொண்ணுங்க, பசங்க வீடியோக்களை பார்த்தேன். தமிழ்நாட்டு பொண்ணுங்க சுத்தமாக இருக்க மாட்டாங்க. அதனாலத்தான் தமிழ்நாட்டு பசங்க எங்க ஊரு பொண்ணுங்களை தேடி வர்றாங்க." -அப்படின்னு அந்த வீடியோவில நர்சம்மா சொல்றாங்க!.

பதிலுக்கு, தமிழ் பசங்களும், பொண்ணுங்களும் தொடர்ந்து வீடியோவை வெளியிட, தனிநபர் தாக்குதலில் தொடங்கிய இந்த வீடியோ பதிவுகள், அவரவர் இனங்களையும், மொழிகளையும், குடும்பங்களையும் சேர்த்து தகாத வார்த்தைகளால் இழிவாகப் பேசுவதாக மாறி, இரண்டு மாநிலங்களின் நல்லிணக்கத்துக்கு வேட்டு வைக்கும் விதமாக மாறியது.

நிலைமை மோசமானதை உணர்ந்த கேரளா மற்றும் தமிழக பெரியவர்கள் சிலர், "தமிழ்நாடு வேற, கேரளா வேற இல்லை. நாம எல்லாரும் இந்தியர்கள். ஒரு சிறுவன் போட்ட ஒரு வீடியோவிற்கு தமிழ் பெண்கள் எல்லாரையும் இழிவா பேசுவது தவறு. நாம் எல்லோரும் சகோதர, சகோதரிகளா இருக்க வேண்டும். இன வேற்றுமையை உருவாக்கக் கூடாது.

"மியூசிக்கலி ஆப்" என்பது நம் அன்றாட வாழ்க்கையில் வேலைப் பழுக்களில் இருந்தும், மன உளைசல்களில் இருந்தும் விடுபடவே ஒழிய, இப்படி லைக் வாங்குவதற்கும் பிரபலமாவதற்கும் இனவேறுபாட்டை உருவாக்குவது தவறு" என்று அறிவுரை கூறினர்.

வேறு சிலரோ, "இதுக்கண்டிப்பாக அரசியல் வாதிகளின் தூண்டுதல். தமிழகம் மற்றும் கேரளாவின் நட்பை கெடுக்கவே இப்படி தூண்டி விடுகிறார்கள்" என்று சமாதனப்படுத்தி பார்த்தார்கள்.

இதில் விஷயம் புரிந்த நிறைய கேரள நண்பர்கள், தங்கள் தரப்பில் வீடியோ வெளியிட்டவர்களை அதிகப்படியாக கண்டித்தனர். "நமதுக் கேரளா பயங்கர அழிவை சந்தித்து இன்னும் மீளாமல் இருக்கிறது. அதை எப்படி மீட்டெட்டுப்பது என்று யோசியுங்கள். அதை விட்டு ஏன் இப்படி அவர்களது வாழ்வியலைப்பற்றியும் , வாழ்க்கைத்தரத்தை பற்றியும் இப்படி இழிவுப்படுத்துகிறீர்கள். நாம் ஆபத்தில் இருந்த பொழுது அவர்கள் உதவினார்கள். நம் நாட்டை மீட்டெடுக்க ஒன்றிணையுங்கள்" என்றெல்லாம் உள்ளூர்வாசிகள் முதற்கொண்டு வெளி நாடுகளில் பணிபுரியும் கேரளா மாநிலத்தவர் பலரும் வீடியோ பதிவுகளின் மூலம் அறிவுரை கூறினர்.

ஆனால், மீண்டும் தொடர்ந்து வீடியோக்கள் வெளிவந்துக் கொண்டே இருந்தன. இருத்தரப்பினர் பக்கத்திலும் கொந்தளிப்பு தனியவில்லை. சமூக வலைத்தளங்கள் அனைத்திலும் இவர்கள் வெளியிட்ட வீடியோக்களை மாறி மாறி பகிர்ந்ததேக் காரணம்.

நிலைமை மேலும் மோசமாகிக் கொண்டிருப்பதை பார்த்து, "இனி இந்த மாதிரியான வீடியோ பதிவிட்டால் வழக்குப் பதிவு செய்யப்படும்" என்று கடுமையாக எச்சரித்ததை அடுத்து இந்தப் பிரச்சனை முடிவுக்கு வந்தது.

●






# இந்தியாவில் 30 சேமிக்கலாம் வாங்க!

■ சேதுராமன் சாத்தப்பன்

- 10 டிசம்பர் 2017 அன்று அமெரிக்காவிற்கு வந்தேன். இன்னும் ஒரு வருடம் வேலை நிமித்தமாக இங்கே இருக்க வேண்டும். இந்தியாவில் சென்னையில் இருக்கும் சேமிப்பு கணக்கு அப்படியே இருக்கிறது. நான் ஒரு வருடம் மட்டுமே இங்கு இருக்கப் போவதால் அதை என்.ஆர்.ஓ. கணக்காக மாற்ற வேண்டுமா? தங்கள் பதில் தேவை.

**ஆபிரகாம்**
**டெட்ராய்ட்**

வெளிநாட்டில் ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு வேலைக்கு என்று வந்தவுடன் நீங்கள் வெளிநாட்டு வாழ் இந்தியர் என அழைக்கப்படுவீர்கள். இதனால் இந்தியாவில் நீங்கள் வைத்திருக்கும் சேமிப்புக் கணக்கை என்.ஆர்.ஓ. கணக்காக மாற்றுவது அவசியம். இந்த கணக்கில் வரும் வட்டிக்கு வரிப்பிடித்தம் செய்யப்படும் என்பதை கவனத்தில் கொள்ளவும். இந்தியா சென்றவுடன் அதை மறுபடியும் சாதாரண சேமிப்பு கணக்காக மாற்றிக் கொள்ளலாம்.

- நான் அமெரிக்காவில் வசித்து வருகிறேன். இந்தியாவில் எந்தவிதமான வருமானமும் கிடையாது. ஆனால் என்.ஆர்.ஐ. கணக்கு வைத்திருக்கிறேன். அதில் வருடத்திற்கு வட்டி ரூபாய் 500,000 மேல் வருகிறது. நான் வருமான வரி கணக்கு தாக்கல் செய்ய வேண்டுமா?

**கனகராஜ்**
**நியூ ஜெர்சி**

நீங்கள் இந்தியாவில் எந்தவிதமான வருமானமும் ஈட்டவில்லை. ஈட்டும் வருமானம் என்.ஆர்.ஐ., கணக்கில் வரும் வட்டி மட்டும் தான். இந்த வட்டி வருமான வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் நீங்கள் வருமான வரிகணக்கு தாக்கல் செய்ய வேண்டியதில்லை.

- நாங்கள் கடந்த 20 வருடங்களாக அமெரிக்காவில் வசித்து வருகிறோம். எங்களுடைய முன்னோர்கள் விட்டுச் சென்ற ஒரு வீடு மதுரையில் இருக்கிறது. அதை விற்று எப்படி பணத்தை அமெரிக்கா கொண்டு செல்வது?

**ரமாமணி**
**கலிபோர்னியா**

நீங்கள் அந்த வீட்டை தாராளமாக விற்கலாம். அப்படி விற்கும் போது பான் கார்டு கட்டாயம் தேவைப்படும் என்பதை நினைவில் கொள்ளவும். உங்களுடைய

பங்கிற்கான ஆதாய வரி (கேபிடல் கெயின் டாக்ஸ்) கட்ட வேண்டும். 15 சி.ஏ. மற்றும் சி.பி. பார்ம் வங்கியில் சமர்பிக்க வேண்டும்.

பின்னர் மீதம் உள்ள பணத்தை உங்களுடைய என்.ஆர்.ஓ. கணக்கில் போட வேண்டும். பின்னர் அதை அமெரிக்காவிற்கு நீங்கள் எடுத்துச் செல்லலாம். அல்லது உங்களுடைய என்.ஆர்.ஐ. கணக்கில் வரவு வைக்கலாம்.

- **PINS அக்கவுண்ட் என்றால் என்ன?**

**ராமானுஜன்**
**நியூ ஜெர்சி**

PINS அக்கவுண்ட் என்பது நீங்கள் கேபிடல் மார்க்கெட் சம்பந்தமான டிரான்ஸ்க்ஷன் பண்ணும் போது உங்களுடைய என்.ஆர்.ஐ., மற்றும் என்.ஆர்.ஓ. கணக்குகளுக்கு தேவைப்படும் அக்கவுண்ட் ஆகும். அதாவது நீங்கள் பங்குச் சந்தை வர்த்தகம் செய்யும் போது தேவைப்படும் அக்கவுண்ட் ஆகும்.



- **என்.ஆர்.ஐ. டெபாசிட்கள் ஏன் குறைந்த பட்சம் ஒரு வருடம் போடப்பட வேண்டும். என்.ஆர்.ஓ. டெபாசிட்களுக்கு இந்த விதி இல்லை. 7 நாட்கள்**



கூட டெபாசிட்கள் என்.ஆர்.ஓ. கணக்கில் போடப்படலாம்.

**கண்ணன்**
**டெக்ஸாஸ்**

நல்ல கேள்வி. என்.ஆர்.ஐ. டெபாசிட், எப்.சி.என்.ஆர்., டெபாசிட்கள் அந்நிய செலாவணியாக கருதப்படுகிறது. ஆதலால் அந்நிய செலாவணிகள் குறைந்த பட்ச நாட்கள் போட்டார்கள் என்றால் எடுத்துச் செல்லும் அபாயம் இருக்கிறது. ஆதலால் டெபாசிட்கள் குறைந்தபட்சம் நாட்கள் இருக்க வேண்டும் என்பதால் ஒரு வருடம் என்ற விதி வங்கிகளில் இருக்கிறது.

**உங்கள் சந்தேகங்களுக்கு**

உங்கள் சந்தேகங்களை எழுதுங்கள். எழுத வேண்டிய ஈமெயில் முகவரி sethuraman.sathappan@gmail.com

●

# இளமையை காக்கும் உணவுகள்



ஹவுஸ்டன் மாமி

**எலுமிச்சை ஜூஸ்**

காலையில் இளஞ்சூடான நீரில் சிறிது எலுமிச்சைச் சாறும், தேனும் கலந்து குடித்து வந்தால் அது செரிமானத்துக்கு உடனடி ஊக்கமூட்டியாக அமையும். மேலும் பித்தநீரை தயாரிக்கும் கல்லீரலைத் தூண்டுவதோடு தேவையற்ற நச்சுகளை வெளியேற்றும். இதன் மூலம் இலகுவான முறையில் மலம் வெளியேறும்.

**நெல்லிக்காய்**

வைட்டமின்-சி நிறைந்த நெல்லிக்காயை பச்சையாக மென்று தின்பதன் மூலம் நோய் எதிர்ப்புச் சக்தி கிடைக்கிறது. நெல்லிக்காயில் புரதம், கொழுப்பு, சுண்ணாம்பு, இரும்பு மற்றும் தாதுச்சத்துகள் அடங்கியிருப்பதால், ரத்தத்தில் கொலஸ்ட்ரால் படிவதைத் தடுக்கும்.

உடல் பருமன் பிரச்சனை உள்ளவர்கள் நெல்லிக்காய்ச் சாற்றுடன் இஞ்சிச் சாறு சேர்த்துக் காலையில் வெறும் வயிற்றில் குடித்துவந்தால், கொழுப்பு கரையும்.

**இஞ்சி**

தேனில் ஊறவைத்த இஞ்சியை மென்று தின்பதால், செரிமானக் கோளாறு மற்றும் பல பிரச்சனைகள் சரியாகும்.

**தேன்**

தேனை முகத்தில் தடவி ஊறவைத்துக் கழுவினால் முகச்சுருக்கம் ஏற்படாமல் தடுக்கலாம். கண்களைச் சுற்றி ஏற்படும் கருவளையத்தைப் போக்க தேன் தடவிவந்தால் பலன் கிடைக்கும்.

**வெண்பூசணி-திராட்சை-அன்னாசிபழம்**

தினசரி காலைப் பொழுதுகளில் வெண்பூசணிச் சாறு, திராட்சைச் சாறு, அன்னாசிப்பழச் சாறு குடித்து வந்தால், உடல்பருமன் ஏற்படாமல் தடுக்கும். குறிப்பாக வெண்பூசணி உடல் சூட்டைக் குறைப்பதோடு குடல்புண்ணை ஆற்றக்கூடியவை. அன்னாசிப்பழத்தில் நார்ச்சத்து அதிகம் இருக்கிறது; கொழுப்புச்சத்து குறைவாக உள்ளது. இது பித்தம் மற்றும் ஜீரணக்கோளாறுகளைச் சரிசெய்து தொப்பையைக் குறைக்க உதவுகிறது.

**பப்பாளிப்பழம்**

அடுத்ததாக அன்றாடம் காலை உணவாக பப்பாளிப் பழத்தை உண்பது மிகவும் நல்லது. இது உடலில் உள்ள கழிவுகளை வெளியேற்றுவதோடு இளமைப்பொலிவோடு வாழ உதவும். பப்பாளிப் பழத்தைத் தொடர்ந்து நான்கு வாரங்கள் சாப்பிட்டு வந்தால் 19.2 சதவிகிதம் கொழுப்புச்சத்து குறைவது கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

சருமப் பராமரிப்புக்கும் பப்பாளி பயன்படுகிறது. பப்பாளிப் பழத்தை முகத்தில் பூசி மசாஜ் செய்து மிதமான சுடுநீரில் முகம் கழுவினால் முகம் பிரகாசிக்கும்.

**கொய்யாப்பழம்**

கொய்யாப்பழம் சாப்பிடுவதால் முகம் பொலிவு பெறச்செய்வதோடு அழகு மிளிரும். தோல் வறட்சியை நீக்குவதோடு முதுமைத் தோற்றத்தை தள்ளிப்போடச் செய்து, இளமையுடன் இருக்கச் செய்யும். இரவில் கொய்யாப்பழம் சாப்பிடாமல் இருப்பது நல்லது.

**சப்போட்டாப் பழம்**

தினமும் இரண்டு சப்போட்டாப் பழத்தைச் சாப்பிட்டு வந்தால் உச்சி முதல் உள்ளங்கால் வரை பலன் தரும். தூக்கம் வராமல் தவிப்பவர்களுக்கு சப்போட்டா அருமையான மருந்தாகும். மேலும் இது இதயக்கோளாறு ஏற்படாமல் தடுக்கும்; சருமத்தை மிருதுவாக்கும்.

# கருவில் உள்ள குழந்தையின் வளர்ச்சிக்கு உதவும் காலிஃப்ளவர்



**காலிஃப்ளவரில் வைட்டமின் ஏ, பி, இ, கே சத்துக்கள் அதிகம் உள்ளன. தினமும் 90 கிராம் அளவுக்கு காலிஃப்ளவரை சாப்பிடும்போது வைட்டமின் சி சத்து கிடைக்கிறது. காலிஃப்ளவரில் உள்ள ஊட்டச்சத்துக்கள் அனைத்தும் உடலுக்கு உன்னதமான மருந்தாகிறது. புற்றுநோய் உருவாவதை தடுக்கிறது.**

நார்ச்சத்து உள்ளதால் மலச்சிக்கல் இல்லாமல் செய்கிறது. காலிஃப்ளவர் கருவில் உள்ள குழந்தையின் மூளை, முதுகுத்தண்டு வளர்ச்சிக்கு உதவுகிறது. மூட்டுவலியை குறைப்பதில் காலிஃப்ளவர் முக்கிய பங்கு வகிக்கிறது.

மெக்னீசியம், பொட்டாசியம், கால்சியம் போன்றவை இருப்பதால் இதில் எதிர்ப்பு சக்தி அதிகமாக உள்ளது. இதயத்துக்கு பலம் கொடுக்கிறது. செரிமான கோளாறுகளை சரிசெய்கிறது. இதை உணவில் சேர்த்துக் கொள்வதால் பல்வேறு நன்மைகள் விளையும். காலிஃப்ளவரை பயன்படுத்தி கீழ்வாதம், முடக்குவாதத்தால் ஏற்படும் வலிக்கான மருந்து தயாரிக்கலாம்.

ஒரு ஸ்பூன் காலிஃப்ளவர் பசை, சிறிது பூண்டு, மிளகு சேர்த்து, ஒரு டம்ளர் நீர்விட்டு கொதிக்க வைத்து குடித்தால் மூட்டுவலி, வாத ஜுரம், வீக்கம் சரியாகும். உடல் வலியும் குறையும்.

காலிஃப்ளவர் இலைகளை பயன்படுத்தி அடிபட்ட வீக்கம், மூட்டுவலிக்கான மேல்பூச்சு மருந்து தயாரிக்கலாம். விளக்கெண்ணெயுடன் காலிஃப்ளவர் இலை பசையை சேர்த்து நன்றாக வதக்கி பத்தாக போட்டு துணிக்கட்டி வைத்தால் வலி, வீக்கம் சரியாகும்.

காலிஃப்ளவரை பயன்படுத்தி சிறுநீரகம், இதயத்தை பலப்படுத்தும் மருந்து தயாரிக்கலாம். ஒரு ஸ்பூன் காலிஃப்ளவர் பூ பசை, அரை ஸ்பூன் சீரகம், சிறிது மிளகுப்பொடி சேர்த்து ஒரு டம்ளர் நீர்விட்டு கொதிக்க வைக்கவும். இதை வடிகட்டி குடிக்கவும். இது இதயத்துக்கு பலம் கொடுக்கும் ஊட்டச்சத்து. எலும்பு பலவீனம் அடையாமல் செய்கிறது.

அடிபட்ட இடத்தில் ரத்தம் சேர்ந்து வீக்கம், ரத்தக்கசிவு இருந்தால், அவை சரியாகும். சிறுநீர் பெருக்கியாக விளங்குவதுடன் ரத்த அழுத்தத்தை குறைக்கிறது. ரத்தத்தை உறைய, வைக்கும் தன்மை கொண்டது.

காலிஃப்ளவரை பயன்படுத்தி புற்றுநோய் செல்கள் வளர்ச்சியை கட்டுப்படுத்தும் மருந்து தயாரிக்கலாம். ஒரு ஸ்பூன் காலிஃப்ளவர் பசை, கால் ஸ்பூன் மஞ்சள் பொடி, அரை ஸ்பூன் சீரகம் சேர்த்து ஒரு டம்ளர் நீர்விட்டு கொதிக்க வைக்கவும். வடிகட்டி 50 முதல் 100 மில்லி அளவுக்குத் தினமும் புற்றுநோயாளிகள் எடுத்துக்கொள்ளும்போது புற்றுநோய் செல்கள் வளர்வது தடுக்கப்படும்.



## தோசை ஃப்ரை

தேவையானவை: கேழ்வரகு மாவு, கம்பு மாவு, சோள மாவு, கோதுமை மாவு, அரிசி மாவு (அனைத்தும் சேர்த்து) - ஒன்றரை கப், பொடியாக நறுக்கிய கொத்தமல்லித்தழை - ஒரு டேபிள்ஸ்பூன், ரவை - கால் கப், உப்பு, எண்ணெய் - தேவையான அளவு, தேங்காய்த் துருவல் - கால் கப், பொடியாக நறுக்கிய சின்ன வெங்காயம் - கால் கப், பச்சை மிளகாய் - 4.

தாளிக்க: கடுகு - ஒரு டீஸ்பூன், உளுந்து - அரை டீஸ்பூன், கடலைப் பருப்பு, சீரகம் - தலா ஒரு டீஸ்பூன், பெருங்காயத்தூள் - ஒரு சிட்டிகை, கறிவேப்பிலை - சிறிது, உடைத்த முந்திரிப்பருப்பு - 2 டேபிள்ஸ்பூன், பொடியாக நறுக்கிய வெங்காயம் - கால் கப்.

செய்முறை: மாவு வகைகளை ஒன்றாகச் சேர்த்து உப்பு, ரவை கலந்து கரைத்துக்கொள்ளவும். இத்துடன் சின்ன வெங்காயம், பச்சை மிளகாய், கொத்தமல்லித்தழை, தேங்காய்த் துருவல் சேர்த்து கலக்கிக்கொள்ளவும். இதனை தோசைகளாக ஊற்றி, துண்டுகளாக்கிக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் விட்டு, காய்ந்ததும் தாளிக்க கொடுத்துள்ள பொருட்களைச் சேர்த்து தாளிக்கவும். பின் தோசைத் துண்டுகளைச் சேர்த்துக் கிளறி இறக்கி பரிமாறவும்.



# வெங்காயத்தாளின் மகிமைகள்



ஆயுர்வேதத்தில் சிறிய மற்றும் பெரிய வெங்காயத்தின் தாள் முக்கிய மருந்துப் பொருளாக பயன்படுத்தப்பட்டு வருகிறது. உடல் ஆரோக்கியத்தைப் பேணிக் காப்பதிலும் சிறப்பான இடம் வகிக்கிறது.

ஆயுர்வேத மருத்துவத்தில் வெங்காயத்தாள் சாறு பலவிதமான பிரச்சனைகளைக் குணப்படுத்த உபயோகப்படுத்தப்படுகிறது. ரத்தம் இறுகிப் போவதைத் தடுத்து அதனை நீர்த்துப் போக செய்கிறது.

மாரடைப்பு போன்ற இதயம் தொடர்பான பிரச்சனைகள் சரி செய்யப்படுகின்றன. பக்கவாதம் ஏற்படுவதைத் தடுக்கிறது. ரத்தத்தில் கெட்ட கொழுப்பு அதிகரிப்பதைத் தடுக்கிறது. இதில், கந்தகச் சத்து ஏராளமாக இருப்பதால், சருமம் தொடர்பான நோய்கள் வராது. ஜீரண சக்தியை அதிகரித்து நரம்பு செல்களைப் பலப்படுத்தும். நினைவாற்றலை அதிகரித்து, அறிவுத்திறன் வளர்க்க உதவுகிறது.

வெங்காயத் தாள் சாறைத் தொடர்ந்து குடித்து வந்தால் இதயத்தில் ஏற்படுகிற அடைப்பு 90% குறையும்.



சமையலில் வெங்காயத் தாளினை கூட்டாகவோ, சூப்பாகவோ, சட்னியாகவோ பல விதங்களில் சேர்த்துக் கொள்ளலாம்.

# முகம் அழகு பெற



முகம் அழகாகவும், மென்மையாகவும் இருக்க, இயற்கையான வழிகள் பல இருக்கின்றன. இதன் மூலம், முகத்தை மென்மையாக வைத்து கொள்ள முடியும்.

**சருமம் மென்மை பெற**

தேவையானவை :- அரிசி 1 கப், குளிர்ந்த நீர், 2 கப்.

செய்முறை :- குளிர்ந்த நீரில், அரிசியை 20 நிமிடம் ஊற வைக்க, வேண்டும். அடுத்து, அரிசியை தனியாக வைத்துக் கொள்ள வேண்டும். வடிக்கட்டிய நீரை மட்டும், சருமத்தில் பஞ்சை கொண்டு பூசி, மசாஜ் செய்யவும். அடுத்து அந்த அரிசியை அரைத்துக் கொண்டு முகத்தில் தடவவும். இவ்வாறு செய்து வந்தால், பிறந்த குழந்தையை போல சருமம் மாறுமாம்.

**முகம் வெண்மை பெற**

தேவையானவை : ஆர்கானிக் அரிசி 3 டீஸ்பூன், அவகடோ பழச்சாறு 2 ஸ்பூன், தேன் 1 ஸ்பூன்

செய்முறை : அரிசியை வேக வைத்து, ஆறிய பிறகு மசித்து கொள்ளவும். பிறகு, இவற்றுடன் அவகடோ பழச்சாறு, தேன் சேர்த்து நன்கு கலந்து கொண்டு முகத்தில் தடவ வேண்டும். 20 நிமிடம் கழித்து, முகத்தை வெது வெதுப்பான நீரில், கழுவவும். இதனைத் தொடர்ந்து செய்து வந்தால், முகம் நீண்ட காலம் இளமையாக இருக்குமாம்.

**முக அழுக்கு நீங்க**

தேவையானவை :- கிரீன் டீ 1 கப், தேன் 1 டீஸ்பூன், அரிசி மாவு 1 ஸ்பூன்.



செய்முறை :- முதலில் கிரீன் டீயில் தேனை சேர்த்து, நன்கு கலந்து கொள்ள வேண்டும். அடுத்து, இவற்றுடன் அரிசி மாவை சேர்த்து பேஸ்ட் போல கலந்து, முகத்தில் பூசி கொள்ளவும்.

15 நிமிடம் கழித்து, மிதமான நீரில் முகத்தை கழுவினால், முகத்தில் உள்ள அழுக்குகள் நீங்கி, வெண்மை பெறும்.

**முகப்பரு நீங்க**

தேவையானவை :- ஆர்கானிக் அரிசி 3 ஸ்பூன், பால் 1 ஸ்பூன், தேன் 1 ஸ்பூன்

செய்முறை :- முகப்பருக்கள் முற்றிலுமாக நீங்க, முதலில் அரிசியை வேக வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு நீரை மட்டும் தனியாக வடித்துக் கொள்ள வேண்டும். அடுத்து, வேக வைத்த அரிசியை மசித்து கொண்டு, அவற்றுடன் பால் மற்றும் தேன் சேர்த்து நன்கு கலக்கிக் கொள்ளவும்.

இந்தக் கலவையை முகத்தில் தடவி, 30 நிமிடம் கழித்து, நீரில் அலசினால் முகபருக்கள் காணாமல் போய்விடும்.

# இஞ்சி சாதம்



**தேவையானவை :**

உதிராக வடித்த சாதம் - 2 கப்,

தோல் நீக்கி பொடியாக நறுக்கிய இஞ்சி - 2 டீஸ்பூன்,

புளி - எலுமிச்சைப்பழம் அளவு,

மஞ்சள் தூள் - 1/2 டீஸ்பூன்,

காய்ந்தமிளகாய் - 6,

உப்பு - தேவைக்கு,

அலங்கரிக்க தேங்காய்த்துருவல் - 2 டீஸ்பூன்,

கொத்தமல்லித்தழை - தேவைக்கு.

**தாளிக்க...**

கடுகு, உளுத்தம்பருப்பு - தலா 1 டீஸ்பூன்,

பெருங்காயத்தூள் - 1/4 டீஸ்பூன்,

நல்லெண்ணெய் - 2 டீஸ்பூன்,

கறிவேப்பிலை - 5 இலைகள்.

**எப்படிச் செய்வது?**

மிக்சியில் இஞ்சி, புளி, மஞ்சள் தூள், காய்ந்தமிளகாய், உப்பு சேர்த்து விழுதாக அரைக்கவும். வாணலியில் நல்லெண்ணெய் விட்டு தாளிக்க கொடுத்த பொருட்களை தாளித்து, அரைத்த விழுது சேர்த்து வதக்கி எண்ணெய் பிரியும் வரை கிளறவும். பின்பு சாதம் சேர்த்து நன்கு கலந்து அடுப்பை நிறுத்தவும். தேங்காய்த்துருவல், கொத்தமல்லித் தழையை தூவி அலங்கரித்து பரிமாறவும்.



# சீராளக் கறி

தேவையானவை: பாசிப்பருப்பு - ஒரு கப், தேங்காய்த் துருவல் - கால் கப், பொட்டுக்கடலை பொடி - 2 டேபிள்ஸ்பூன், உப்பு - தேவையான அளவு, பச்சை மிளகாய் - 2 (நறுக்கிக் கொள்ளவும்), சின்ன வெங்காயம் (பொடியாக நறுக்கியது) - கால் கப், பெருங்காயத்தூள் - சிறிதளவு, மஞ்சள்தூள் - சிறிதளவு.

தாளிக்க: கடுகு - ஒரு டீஸ்பூன், கறிவேப்பிலை - சிறிதளவு, எண்ணெய் - தேவையான அளவு, பட்டை - சிறிதளவு, கிராம்பு - 2, சோம்பு - ஒரு டீஸ்பூன்.

செய்முறை: வெறும் வாணலியில் பாசிப்பருப்பை வாசனை வரும் வரை வறுத்து, மிக்ஸியில் ஒன்றிரண்டாகப் பொடித்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் ஊற்றிக் காய்ந்ததும், தாளிக்கக் கொடுத்துள்ள பொருட்களைச் சேர்த்துத் தாளிக்கவும். இத்துடன் நறுக்கிய பச்சை மிளகாய், வெங்காயம் சேர்த்து வதக்கி, உப்பு, பெருங்காயத்தூள், மஞ்சள்தூள், தேங்காய் சேர்த்து வதக்கி, சிறிது தண்ணீர் ஊற்றிக் கொதிக்கவிடவும். பிறகு பாசிப்பருப்பு, பொட்டுக்கடலைப் பொடி சேர்த்துக் கிளறி, பாசிப்பருப்பு சிறிது வெந்ததும் இறக்கவும். இதனை இட்லித்தட்டில் பரப்பி வைத்து, 10 நிமிடம் ஆவியில் வேகவைத்து இறக்கி, துண்டுகள் போட்டுப் பரிமாறவும். புரோட்டீன் நிறைந்த சத்தான சிற்றுண்டி இது.





# பிக்பால்



■ ராஜேஷ் குமார்

**வி**வேக் லேப்டாப்பில் மும்முரமாக பார்வையைப் பதித்து இருந்தபோது, ரூபலா பக்கத்தில் வந்து நின்றாள்.

“என்னங்க... ஏதாவது முக்கியமான வேலையா..?”

விவேக் தலை நிமிராமல், “சொல்லு ரூபி...! என்கிட்டே ஏதோ சொல்லணும்ன்னு வந்துட்டே... இனிமேல், அதுதானே எனக்கு முக்கியமான விஷயம்..” என்றான்.

ரூபலா, ‘தொப்’ பென்று பக்கத்தில் இருந்த ஒரு காலியான நாற்காலியில் உட்கார்ந்து கொண்டே சொன்னாள்.

“நம்ம வீட்டு வேலைக்காரி சரியில்லைங்க..’

“சரியில்லைன்னா?”

“வீட்டு வேலைகளை சரியா செய்யறதில்லை.. நான் சொல்ற வேலைகளைச் செய்யாம அவ இஷ்டத்துக்கு ஏதோ பண்றா.

சொல்லும் போது, சரி சரின்னு தலையாட்றா.. அப்புறம் அதே தப்பை பண்றா. அவளுக்கு மூளையே இல்லைன்னு நினைக்கிறேன்..”




“பாவம் அவளை ஏன் திட்டறே..? மூளை எல்லோர்க்கும் ஒரே மாதிரி இருந்துட்டா, இவ்வளவு பிரச்சனைகள் ஏன்?”

“எனக்கு ரொம்ப நாளை ஒரு சந்தேகம்ங்க.. மூளை எல்லோர்க்கும் ஒரே மாதிரிதானே இருக்கும்?”

“ஆமா... அதுல உனக்கு என்ன சந்தேகம்?”

“மூளை ஒரே மாதிரி இருந்தாலும், அதனோட செயல்பாடுகளில் மட்டும், ஏன் இவ்வளவு வித்தியாசம்?”

விவேக், பார்த்துக் கொண்டிருந்த லேப்டாப்பை லாக் அவுட் செய்துவிட்டு, ரூபலாவிடம் நிமிர்ந்தான்.

“ரூபி... நான் இப்போ உன்கிட்டே ஒரு சுலபமான கேள்வியைக் கேட்கப் போறேன். நீ அந்த கேள்விக்கு பத்து செக்கன்ட்ஸ்ல, பதில் சொல்லணும்.. இது கணக்கு சம்பந்தப்பட்ட கேள்விதான்..”

“சரி கேளுங்க?”

“14x13 எவ்வளவு..?”

ரூபலாவின் விழிகளில், சட்டென்று ஒரு திகைப்பு உற்பத்தியாகி, அடுத்த விநாடி இயல்புக்கு திரும்பியது.

“14x13 தானே?”

“அதேதான்.. சீக்கிரம் சொல்லு.. டைம் பத்து செக்கன்ட்ஸ்தான்..”

ரூபலா, விரல்களை மடக்கியும், கண்களை மூடியும் யோசித்துவிட்டு, பத்தாவது விநாடி முடியப்போகும் நேரத்தில், “142” என்று சொன்னாள்.

“தப்பு.. 182’’ என்றான், விவேக்.

ரூபலா தப்பாய் சொன்னதுக்காக, நுனி நாக்கைக் கடித்துக் கொண்டு கையை உதறினாள்.

“ஸாரிங்க..!”

"இதுல ஸாரி சொல்ல ஒண்ணுமே இல்லை ரூபி... 14x13 என்கிற எண்களோட பெருக்குத் தொகையை ஸ்கூல் டேஸ்ல நீ எத்தனையோ தடவை போட்டுப் பார்த்திருப்பே... இருந்தாலும், நான் திடீர்னு இந்தக் கேள்வியைக் கேட்டதும் உன்னால பதில் சொல்ல முடியாமல் போனதுக்கு என்ன காரணம் தெரியுமா?"

"தெரியலை.."

"இப்ப நான் சொன்ன மாதிரியான கணக்குகளையும், புதிர்களையும் நினைவில் வைத்துக் கொள்ள, நம்ம மூளையானது முழுமையாய் செயல்படணும்..."

"அப்படீன்னா என்னோட மூளை முழுமையாய் செயல்படலைன்னு சொல்றீங்களா?"

"ஆமா.. அதுதான் உண்மை... உனக்கு மட்டுமில்லை, நூத்துக்கு அறுபது பேர்களோட மூளையின் செயல்பாடு, இப்படித்தான் இருக்கும்.."

"நீங்க மட்டும் சரியா சொல்லிட்டீங்க?''

"மீதி இருக்கிற 40 சதவீதம் பேர்களில் நானும் ஒருத்தன்.."

"நீங்க இப்போ என்ன சொல்ல வர்றீங்கன்னு எனக்குப் புரியல.."

"புரியும்படியாவே சொல்றேன். இப்ப நான் சொன்ன ஒரு கணக்கையும், புதிர்களையும் விஷயங்களையும், நினைவில் பதிய வைத்துக் கொள்ளணும்னா, நம்ம மூளை முழுமையாய் செயல்படணும். ஆனா நம்மில் அறுபது சதவீதம் பேர், மூளையை சரியாய் வேலை வாங்கறது கிடையாது. நமக்குத் தேவையான விருப்பப்பட்ட விஷயங்களை மட்டும், பதிவு பண்ணிகிட்டு மற்ற விஷயங்களில் அக்கறை காட்டாமல் விட்டுடுவாங்க.

உதாரணத்துக்கு, நம்ம ஸ்கூல் டேஸ் டீச்சர்ஸை மறக்கவே மாட்டோம். ஆனா நம்ம வாழ்க்கையில் சந்திக்கிற சில நபர்களை மறந்துடுவோம். இதுக்கு என்ன காரணம் தெரியுமா ரூபி"

"சொல்லுங்க.. எனக்குத்தான் அரைகுறை மூளையாச்சே?"

விவேக், சிரித்துவிட்டு தொடர்ந்தான்.

"ரூபி! மூளை ஒரு அற்புதமான கெமிக்கல் கம்ப்யூட்டர். அதுக்கு என்னென்ன திறமைகள் இருக்கு, அந்தத் திறமைகள் எந்தெந்த பாகங்களில் இருக்கு என்கிற கேள்விகள் எழுப்பப்பட்டு, அதுக்கு விடைகளும் கண்டுபிடித்தாயிற்று. நம்ம மூளையில் ரெண்டு பெரு மூளைகள் இருக்கு. முதலாவது இடது பெருமூளை (LEFT GEREBRAL HEMISPHERE) அடுத்தது, வலது பெருமூளை (RIGHTCEREBRALHEMISPHERE)





இதில், இடது பெருமூளை வேலை, ஏன் எதுக்குன்னு எதையும் சிந்திச்சுப் பார்க்கிற வகையைச் சேர்ந்தது. ஆனா வலது பெருமூளையோ கோடிக்கணக்கான தகவல்களை மூளையில் பதிய வைத்து, பேர்லல் ப்ராஸஸிஸ் (PARALAL PROCESSING) முறையில் பொருட்களையும், ஆட்களையும் கண்டுபிடிக்கும் ஆற்றலைக் கொண்டதாய் இருக்கிறது. வீட்டில் ஒரு பொருள் வைத்த இடத்தில் காணவில்லையென்றால் அதைக் கண்டுபிடிப்பது, வலது பெருமூளைதான். அதே மாதிரி, என்றைக்கோ பார்த்த ஒருவர், திடீரென்று நம்மைச் சந்தித்து 'என்ன ஸார்.. என்னைத் தெரியுதா?" என்று கேட்கும்போது "தெரியாமே என்ன.. நீங்க தென்காசி கிருஷ்ணமூர்த்திதானே?" என்று அடையாளம் கண்டுபிடிப்பதும், இந்த வலது பெருமூளைதான். குறிப்பாய் எழுத்தாளர்களுக்கும், கணிதத் துறையைச் சேர்ந்தவர்களுக்கும் வலது பெருமூளை சிறப்பாக செயல்படும்."

"அப்ப மத்தவங்களுக்கு?"

"ரூபி! மூளை என்பது ஓர் உறுப்பு. அந்த உறுப்புதான், நம்ம உடம்புக்கு பிக்பாஸ். மூளை நம் உடம்பில் இருக்கிற எல்லா அவயங்களையும் கட்டுப்படுத்தும். வேலை வாங்கும். நாம செய்ய வேண்டிய வேலை என்ன தெரியுமா? மூளையை வேலை வாங்கணும். ஒரு வீட்ல இருக்கிற வேலைக்காரனுக்கு கட்டளையிட்டு வேலை வாங்கற மாதிரி, மூளைக்கும் வேலை கொடுக்கணும். பேச்சாளர்களும், சிந்தனையாளர்களும், எழுத்தாளர்களும், ஆராய்ச்சியாளர்களும், கணிதத்துறையைச் சேர்ந்தவர்களும் நிறைய சிந்திக்கிறார்கள். அப்படி சிந்திக்கும் பொழுது, மூளைக்கு அதிகப்படியான ரத்தம் பாய்ந்து, வலது பெருமூளை அதிகப்படியாய் இயக்கப்படுகிறது."

"அப்படீன்னா, ஒருவர் புத்திசாலியாய் இருப்பதற்கும், புத்திசாலித்தனம் குறைவாய் இருப்பதற்கும், காரணம் அந்த நபர் மூளையை பயன்படுத்தும் விதம்தான்."

"கண்டிப்பாக. இரண்டு பெருமூளைகளையும் சரியான



முறையில் வேலை வாங்கும் மனிதர்கள், சிறந்த மேதைகளாகவும், விஞ்ஞானிகளாகவும் மாறுகிறார்கள் என்பது உயிரியல் சட்டம் (BIOLOGICAL LAW). ஒருவரின் இடது பெருமூளையும், வலது பெரு மூளையும் தங்களுக்குள் தகவல்களையும் பரிமாறிக் கொள்ளாமல் இருக்கக்கூடாது. அதேபோல், தனித்தனியாக கோஷ்டி அமைத்துக் கொண்டு செயல்பட்டாலும், மூளையின் ஒட்டுமொத்த வளர்ச்சியும் பாதிக்கப்படும். இந்த இரண்டு பெருமூளைகளின் செயல்பாடுகளும், முறையாக இணைக்கப்பட வேண்டும். இந்த இணைப்பு வேலையைச் செய்ய, மூளைக்குள்ளேயே ஓர் உறுப்பு இருக்கு. அந்த உறுப்புக்கு என்ன பேர் தெரியுமா?

கேட்ட விவேக்கை, ரூபலா முறைத்தாள். "எனக்கு தெரியாதுன்னு உங்களுக்கு நல்லாவே தெரியும். இருந்தாலும், அப்படி ஒரு கேள்வியைக் கேட்டு, என்னை மட்டம் தட்டறதுல உங்களுக்கு ஒரு சந்தோஷம்."

"அய்யோ ரூபி.. உனக்கு ஒரு வேளை பதில் தெரிஞ்சிருக்குமோன்னு நினைச்சேன். சரி, நானே சொல்லிடறேன். ரெண்டு பெரு மூளைகளையும் இணைத்து முறையாகச் செயல்பட வைக்கிற அந்த முக்கியமான மூளை உறுப்பின் பெயர், 'கார்ப்பஸ் கலோசம்' (CORPUS CALLOSUM)"

"இந்த 'கார்ப்பஸ் கலோசம்' சரியாய் செயல்படாத பட்சத்தில் மூளைக்குள் என்ன நடக்கும்?"

"லேசாய், காஷ்மீர் கலவரம்தான். கோபம், டென்ஷன் குழப்பம் மறதி, ஒரு கெட்ட வார்த்தையை உபயோகித்துவிட்டு, 'நானா.. எப்ப சொன்னே?" என்று கேட்பதும், 'என்னது.. உன்கிட்டது.. பத்தாயிரம் ரூபாய் கடன் வாங்கினேனா.. வாங்கினது அஞ்சாயிரம்தான் என்று ஒரேடியாய் மறுத்துப் பேசுவதும், இந்த கால கட்டத்தில்தான்..."

ரூபலா, கொஞ்சம் பயம் கலந்த குரலில் கேட்டாள். "இந்த கார்ப்பஸ் கலோசம் சரியாய் செயல்படாமல் போவதற்கு என்ன காரணம்..?"

"காரணம் இதுவரைக்கும் கண்டுபிடிக்கப்படலை. நமது உடம்பிலேயே டாக்டர்களுக்குப் பிடிபடாத விஷயமாகவும், ஒரு மர்மப் பிரதேசமாகவும் இருக்கிற ஒரே ஒரு உறுப்பு, மூளைதான்.

மூளை, ஒரு ரசாயன கம்ப்யூட்டர்ன்னு முதலிலேயே சொன்னேன். மூளையில், பல ரகசியங்கள் பதுங்கியிருக்கு. நமது உடம்பில் உள்ள அடிப்படை செல்கள் எல்லாமே, புரோட்டீன் என்ற புரதப் பொருளால் ஆனது. இந்த புரோட்டீன்களுக்கு அடிப்படை DNH-RNA என்று சொல்லப்படுகிற நியூக்ளிக் அமிலங்கள்தான். மூளையில் உள்ள, எல்லா நியூரான் செல்களும் இந்த இரண்டு அமிலங்களை அடிப்படையாய்க் கொண்டு உருவாக்கப்பட்டவைதான்.

"பிரமிப்பாய் இருக்குங்க.."

"இன்னும் கேளு.. மூளையின் அமைப்பு, செயல்பாடு பற்றிய அத்தனை மர்மங்களும் இந்த நியூக்ளிக் அமிலங்களில் பொதிந்து உள்ளன. இந்த மர்மங்கள் தான் ஜீன் ரகசியங்கள் GENETIC INFORMATION என்று அழைக்கப்படுகிறது. மூளையில் உள்ள கோடிக்கணக்கான ஜீன்களில் ஒளிந்து கிடக்கும் ரகசியங்களை கண்டுபிடிக்கும் முயற்சியில் உயிரியல் வல்லுநர்கள் ஈடுபட்டு 25 சதவீத உண்மைகளை மட்டுமே வெளியே கொண்டு வந்து இருக்கிறார்கள். இந்த 25 சதவீத உண்மைகளை வைத்துக் கொண்டே விஞ்ஞானத்தை விஸ்வரூபம் எடுக்க வைத்திருக்கிறார்கள் விஞ்ஞானிகள். மீதி இருக்கிற 75 சதவீத உண்மைகளும் இந்த நூற்றாண்டின் கடைசிக்குள் கண்டுபிடிக்கப்பட்டுவிடும்."

ரூபலா கண்களை அகல விரித்தாள்.

"உண்மையிலேயே நம்ம மூளை பிக்பாஸ்தான்.."

"ஆனா இந்த பிக்பாஸ்கிட்டே இருக்கிற மைனஸ் பாய்ண்ட் என்ன தெரியுமா.. தன்னைத் தானே காப்பாத்திக்க தெரியாது.."

"புரியலை.."

"அதாவது நம்ம உடம்பில் எந்த இடத்தில் அடிபட்டு செல்கள் சிதைந்து போனாலும், உடனடியாய் அந்த இடத்தில் செல்கள் உற்பத்தியாகி அந்த செல் இழப்பை ஈடு கட்டி தன்னைப் பாதுகாத்துக் கொள்ளும். ஆனால் தலையில் அடிபட்டு மூளையில் உள்ள நியூரான் செல்கள் அழியும் நிலை ஏற்பட்டால், புதிய நியூரான் செல்கள் உருவாகாது. புதிய செல்கள் உருவாகாத காரணத்தால் மூளை சிறிது சிறிதாக இறந்து போகும். இதைத்தான் 'ப்ரெய்ண் டெத்' என்று சொல்கிறார்கள்."

"பிக் பாஸீக்கு இப்படியொரு வீக் பாய்ண்டா?"

ரூபலா சொல்லி சிரிக்க, விவேக்கும் அந்தச் சிரிப்பில் கலந்து கொண்டான். ●








# Sri Balaji Temple of Great Lakes and Devotees

***Present***



# Vande Vedānta Desikam

***Obeisance to Swami Vedanta Desikan***

**Unique Historical Stage Drama in Tamil**









Ticket Details

| | |
|---|---|
| Single Ticket | $20/- |
| Family/Group of 3 | $50/- |
| Family/Group of 4 | $60/- |



**Sridhar - (248) 390-6534**
**Vedha - (248) 214-7402**
**Ramya - (281) 236-2003**

Venue : Clawson High School
Address : 101 John M Ave, Clawson, MI 48017
Date : Nov 17th 2018(Saturday)
Time : 3.00 PM to 5.30 PM

உணவு வரலாறு 16

# கச்சோரி

■ செல்வமணி

**பண்டிகை காலங்களில், அனைத்து வட இந்தியர்களின் வீடுகளிலும், தயார் செய்யப்படும் முக்கியமான சிற்றுண்டி, கச்சோரி. அதிலும், ஹோலி பண்டிகையில் சாமிக்கு படைக்கப்படும் பலகாரங்களில், கச்சோரிக்கு முக்கிய இடம் உண்டு.**

கச்சோரியானது, காண்பதற்கு வட்ட வடிவில் அரைக்கோள வடிவில், உட்பகுதியில் ஸ்டப்பிங் கொண்டு வறுத்தெடுக்கப் பட்ட திண்பண்டம் ஆகும். இது நறுமணம் நிறைந்த மசாலாப் பொருட்கள் மற்றும் காய்கறிகளைக் உள்ளடக்கிய மொறு..மொறு நொறுக்குத் தீனியாகும்.

வட இந்திய உணவான கச்சோரி, காலப்போக்கில் இந்தியா முழுவதும் பரவி, அனைத்துதரப்பு மக்களும் விரும்பி உண்ணப்படும் நொறுக்கு தீனியாக மாறியிருக்கிறது.

கச்சோரியின் வரலாறு

வட நாட்டை பிறப்பிடமாகக் கொண்டது கச்சோரி. கச்சோரி என்பது வடமொழிச் சொல். கச்சோரி என்றால், ரொட்டி , நிரப்பட்ட ரொட்டி, ரொட்டித்துண்டு, கொழுக்கட்டை வகைத் திண்பண்டம் என்று அர்த்தம்.

கச்சோரியின் பிறப்பிடம் ராஜஸ்தான் என்கிறார்கள் ஆய்வாளர்கள். ராஜஸ்தான் மக்கள் தினசரி எடுத்துக்கொள்ளும் உணவில் இது முக்கிய பங்கு வகிக்கிறது. இவர்களின் கச்சோரியில் உளுந்து, பாசிப்பருப்புடன் நறுமண மசாலாப் பொருட்களும் சேர்த்து சமைத்தனர்.

முதன் முதலில் உளுந்து மற்றும் பாசிப்பருப்பானது இங்குதான் விளைவிக்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது. அதனால் தான் கச்சோரியின் பிறப்பிடமானது, ராஜஸ்தானாக கருதப்படுகிறது. எந்த ஆண்டு கச்சோரி கண்டுபிடிக்கப்பட்டது என்பதற்கான சரியான குறிப்புகள் இல்லை. ஆனால் கச்சோரிகளில் ஒருவகையான "மாவா கச்சோரி"யானது ராவத் மால்ஜி டோரேன் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டது எனப்படுகிறது. இது ஒரு இனிப்பு டிஷ்.

இது இந்தியாவின் நொறுக்குத்தீனி மட்டுமல்ல, உலகின் பல பகுதிகளில் பிரபலமான நொறுக்குத் தீனியாக இருக்கிறது.

**கச்சோரியின் வகைகள்**

**ராஜ் கச்சோரி, மசாலா கச்சோரி, வாழைப்பழம் கச்சோரி, தேங்காய் கச்சோரி, கிறிஸ்பி கச்சோரி, வெங்காய கச்சோரி, இனிப்புக் கச்சோரி, பன்னீர் கச்சோரி, உலர் பழங்கள் கச்சோரி, பட்டானிக் கச்சோரி, பருப்புக் கச்சோரி, தயிர் கச்சோரி, பாசிப்பருப்புக் கச்சோரி, உருளைக்கிழங்கு கச்சோரி, கடலைப்பருப்பு கச்சோரி, ரொட்டிக் கச்சோரி, சிக்கன் கச்சோரி, முட்டைக் கச்சோரி, மீன் கச்சோரி.**

## சூப்பரான ஸ்நாக்ஸ் பச்சை பட்டாணி கச்சோரி செய்முறை



**தேவையான பொருட்கள் :**

மைதா - 1 கப், கடலை மாவு - 1 டேபிள் ஸ்பூன், ரவை - 2 டேபிள் ஸ்பூன், தண்ணீர் - 1/4 கப், எண்ணெய் - தேவையான அளவு, உப்பு - தேவையான அளவு.

**உள்ளே வைப்பதற்கு :**

பச்சை பட்டாணி - 2 1/2 கப், சீரகம் - 3/4 டீஸ்பூன், ஓமம் - 3/4 டீஸ்பூன், மஞ்சள் தூள் - 3/4 டீஸ்பூன், பெருங்காயத் தூள் - 1/2 டீஸ்பூன், இஞ்சி பேஸ்ட் - 1 டீஸ்பூன், பச்சை மிளகாய் பேஸ்ட் - 1/2 டீஸ்பூன், சர்க்கரை - 2 டீஸ்பூன், எலுமிச்சை சாறு - 1 டீஸ்பூன், உப்பு - தேவையான அளவு.

**செய்முறை :**

பச்சை பட்டாணியை வேக வைத்து மசித்து கொள்ளவும். ஒரு பாத்திரத்தில் மைதா, கடலை மாவு, ரவை மற்றும் உப்பு சேர்த்து, தண்ணீர் ஊற்றி, சப்பாத்தி மாவு பதத்திற்கு நன்கு மென்மையாக பிசைந்துக் கொள்ள வேண்டும்.

ஒரு வாணலியை அடுப்பில் வைத்து, அதில் சிறிது எண்ணெய் ஊற்றி காய்ந்ததும், சீரகம், ஓமம், பெருங்காய தூள் சேர்த்து தாளித்த பின் மிளகாய் மற்றும் இஞ்சி பேஸ்ட் சேர்த்து 5 நிமிடம் வதக்க வேண்டும்.

பின்பு சர்க்கரை, உப்பு மற்றும் எலுமிச்சை சாறு சேர்த்து, மசித்து வைத்துள்ள பட்டாணியை சேர்த்து நன்கு கிளறி, இறக்கி தனியாக வைக்க வேண்டும்.

பின் பிசைந்து வைத்துள்ள மாவை சிறு உருண்டைகளாக்கி, அதனை சப்பாத்தி போல் தேய்த்து, நடுவே பட்டாணி கலவையை வைத்து மடித்து, தனியாக தட்டில் வைக்க வேண்டும். இதேப் போல் அனைத்து மாவையும் செய்ய வேண்டும்.

ஒரு வாணலியை அடுப்பில் வைத்து, அதில் பொரிப்பதற்கு தேவையான அளவு எண்ணெய் ஊற்றி காய்ந்ததும், தீயை குறைவில் வைத்து, அந்த கச்சோரிகளை எண்ணெய்யில் பொன்னிறமாக பொரித்து எடுக்க வேண்டும்.

இப்போது சுவையான பச்சை பட்டாணி கச்சோரி ரெடி! இதனை விருப்பான சட்னியுடன் சாப்பிட்டால், நன்றாக இருக்கும்.

உதாரணமாக, தென் அமேரிக்காவின் சுரைனாம், டிரினினாட், டொபேகோ மற்றும் கயானா போன்ற பகுதிகளிலும் வேறு வேறு பெயர்களிலும் அழைக்கப்படுகிறது.

பொதுவாகவே கச்சோரியைப் பற்றிய பின்னணியை தேடும்போது., இது ஒரு வர்த்தகர்களின் உணவு என்றே வர்ணிக்கின்றனர். வணிகர்கள் ஊர் விட்டு ஊர், நாடு விட்டு நாடு, கண்டம் விட்டு கண்டம் அவர்களுடனே பயணித்து மற்ற இடங்களுக்கும் பரவியது என்கின்றனர்.

முக்கியமாக, வட இந்தியாவை சேர்ந்த மார்வாடி இனத்தை சேர்ந்தவர்கள், உலகம் முழுவதும் பயணம் செய்து வணிகம் செய்தவர்கள்.

மார்வாடிகளின் எல்லா பண்டிகைக் காலங்களிலும், அன்றாட உணவு பழக்கத்திலும் கச்சோரியானது நீங்கா இடம்பிடித்திருக்கிறது. இவர்கள், உலகம் முழுவதிலும் வியாபாரம் செய்ய சென்றபோது, இந்த கச்சோரியையும் கொண்டு சென்றிருக்கலாம் என்றும் உணவு ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.







# படித்ததில் பிடித்தது

# தாயின் மனம்குளிர வந்த கிருஷ்ணன்

**ஆதி சங்கரர் தாம் சன்னியாசம் மேற்கொள்ள சம்மதித்தால் தாயின் இறுதிக் காலத்தில் மூன்று முறை சங்கரா என்றழைத்தால் எங்கிருந்தாலும் நான் வந்துவிடுகிறேன் என வாக்களித்து செல்கிறார்.**

தாயின் இறுதிக் காலம் நெருங்குகிறது, தாயும் மூன்று முறை சங்கரா என்றழைக்கிறார், சிறிது நேரம் கடக்கிறது அம்மா என்று குரல் கேட்கிறது "சங்கரா வந்துவிட்டாயா, அருகில்வா" என்கிறார் கண்பார்வை மங்கிய நிலையில் அருகில் வந்த சங்கரனை தொட்டுத் தடவுகிறார் தாயார். அவருடைய மனம் பதைத்துப் போகிறது.



துறவரம் மேற்கொண்ட மகனின் உடம்பில் அணிந்துள்ள ஆபரணங்களின் பரிசம் ஏற்படுகிறது. மகன் துறவரக் கடமையிலிருந்து தவறிவிட்டானோ என்று மனம் அஞ்சுகிறது. மீண்டும் "அம்மா" என்ற குரல். அம்மாவை அழைத்தபடி சங்கரன் வருகிறார்.

"மகனே சங்கரா இப்போதுதான் வருகிறாயா" என்று நடந்ததை சங்கரனிடம் கூறுகிறார் சங்கரனோ சிரித்தபடி, "அம்மா நான் துறவரம் சென்றபோது நமது வீட்டின் எதிரிலுள்ள ஆலயத்தின் கிருஷ்ணனிடம் நான் வரும்வரை அம்மாவை பார்த்துக்கொள்" என்று கூறிவிட்டுப் போனேன். நான் வர தாமதமானதால் உங்கள் மனது நோகக் கூடாது என்று அந்த கிருஷ்ணனே வந்திருக்கிறான்" என்றார்.

ஆதிசங்கரரின் தாயார் சமாதியும், அதில் சங்கரர் ஏற்றிவைத்த விளக்கும், தாயாருக்கு காவல் இருந்த கிருஷ்ணரின் ஆலயமும் காலடியில் இன்றும் உள்ளது. உலகத்தையே துறந்தாலும் பெற்ற தாய்க்கு செய்ய வேண்டிய கடமைகளை மகான்கள் செய்ய தவறியதில்லை.

# ஆப்பியம்

காலையில் எழுப்பிட அப்பா
வேண்டாம் - Alarm app -இருக்கு!
நடைபயிற்சிக்கு நண்பன்
வேண்டாம் - step counter இருக்கு!
சமைத்து தந்திட அம்மா
வேண்டாம் - zomato, swiggy app இருக்கு!
பயணம் செய்ய பேருந்து
வேண்டாம் - Uber,OLA app இருக்கு!
விலாசம் அறிய டீ - கடைக்காரரும்,
ஆட்டோ ஓட்டுனரும் வேண்டாம்
Google Map இருக்கு!
மளிகை வாங்க
செட்டியார் தாத்தா கடைக்கும்,
அண்ணாச்சி கடைக்கும்
போக வேண்டாம் - Big Basket இருக்கு!
துணி, மணிகள் வாங்க
கடைத்தெரு போக வேண்டாம் -
Amazon , Flipkart app இருக்கு!
நேரில் சிரித்து பேசிட
நண்பன் வேண்டாம் -
What's up, facebook இருக்கு!
கைமாறாக பணம் வாங்க
பங்காளியும், அங்காளியும்
தேவையில்லை - Paytm app இருக்கு!
மற்றும் பல தகவலுக்கு நம்ம
Google டமாரம் இருக்கு!
இப்படி தனித்து வாழ்ந்திட
அனைத்தும் இருக்கு.....
App என்னும் ஆப்பு!!!
உள்ளங்கை நெல்லிக்கனியென
நீ நினைக்க !
விரித்திருப்பதோ மீள முடியாத
வலைதளம்.!
சிக்கிக்கொண்டோம் பூச்சிகளாய்!
விழித்தெறிந்து விடை கொடு..!
செல்லின அடிமையாய் இல்லாமல்
உறவுகளோடும் சேர்ந்து ஓர்
வலை பின்னுவோம்.....!

# எல்லாம் அவன் செயல்!

**எந்தச் சிங்கமும் தனக்கு வயதாகிவிட்டது என்று தன் குட்டியிடம் சாப்பாடு கேட்பதில்லை.**

எந்த மாடும் படுத்து கொண்டு தன் கன்றிடம் தண்ணீரோ, உணவோ கேட்பதில்லை.

எந்தப் பூனையோ, நாயோ படுத்த படுக்கையாக இருந்து கொண்டு மலம் கழிப்பதில்லை.

மரணம் அடையும் நாள் வரை ஆரோக்கியமாக சுயமாக தன் வேலைகள் அனைத்தையும் செய்கின்றன.

மனிதர்கள் மட்டும் தான் வயதானால் நோய்வரும், இயலாமை வரும் என்று நம்பி, அடுத்தவர்களை எதிர்பார்த்து வாழ ஆரம்பிக்கிறார்கள்.

நன்கு ஞாபகம் வைத்துக் கொள்வோம். முதுமை என்று எதுவும் இல்லை. நோய் என்று எதுவும் இல்லை. இயலாமை என்று எதுவுமில்லை. எல்லாம் நமது மனதிலும், அதன் நம்பிக்கையிலும் தான் இருக்கிறது. சிந்தனையை மாற்றுவோம் ஆரோக்கியமாக வாழ்வோம். நாம் எதை நம்புகிறோமோ அதுவாகவே ஆகிறோம்.

நான்... நான்... நான்... நான் சம்பாதித்தேன், நான் காப்பாற்றினேன், நான் தான் வீடு கட்டினேன், நான் தான் உதவி செய்தேன், நான் உதவி செய்யலனா? அவர் அவ்வளவுதான்.

நான் பெரியவன், நான் தான் வேலை வாங்கி கொடுத்தேன், நான் நான் நான் நான் என்று மார்தட்டி கொள்கிறோம்.

நான் தான் என் இதயத்தை இயக்குகிறேன் என்று நம்மால் சொல்ல முடியுமா?

நான் தான் என் மூளையை இயக்குகிறேன் என்று நம்மால் சொல்ல முடியுமா?




நான் தான் என் இரண்டு கிட்னியையும் இயக்குகிறேன் என்று நம்மால் சொல்ல முடியுமா?

நான் தான் என் வயிற்றில் சாப்பிட்ட உணவில் இருந்து சத்துக்களை தனியாக பிரித்து இரத்தத்தில் கலக்குகிறேன் என்று நம்மால் சொல்ல முடியுமா??

நான் தான் பூக்களை மலர வைக்கிறேன் என்று நம்மால் சொல்ல முடியுமா ?

இவைகள் அனைத்தையும் எவன் செய்கிறானோ இயக்குகிறானோ, அவன் ஒருவனுக்கே "நான்" என்று சொல்வதற்கு அதிகாரமும் உரிமையும் உண்டு..

ஆகையால் நான் என்ற அகந்தையை விட்டு அனைவரிடமும் அன்பாக இருப்போம். *உலகைப்பற்றிக்கவலைப்பட வேண்டாம் ஏனெனில் அது இறைவனுக்குரியது. உணவைப்பற்றி கவலைப்பட வேண்டாம் அது இறைவனிடமிருந்தே கிடைக்கிறது.

எதிர்காலம் குறித்தும் கவலைப்பட வேண்டாம், அதுவும் இறைவனின் கரத்தில் தான் உள்ளது. நமக்கு மேலே உள்ளவனைப் பார்த்து ஏங்க வேண்டாம், தாழ்வு மனப்பான்மை வரும். நமக்கு கீழே உள்ளவனை ஏளனமாய் பார்க்க வேண்டாம் தலைக்கனம் வரும்.

நம்மை யாரோடும் ஒப்பிடாமல் நாம் நாமாகவே இருப்போம் தன்னம்பிகை வரும்.....

# ஐ லவ் யூ மம்மி!

**5 வயது மகன்:** ஐ லவ் யூ மம்மி!

**அம்மா:** வாவ்! ஐ லவ் யூ டூ...

**16 வயது மகன்:** ஐ லவ் யூ மம்மி!

**அம்மா:** சாரி! எங்கிட்ட பணம் இல்ல!

**21 வயது மகன்:** ஐ லவ் யூ மம்மி!

**அம்மா:** யார் அந்த பொண்ணு? எந்த ஊரு?

**நீதி:** அம்மாவுக்கு எல்லாம் தெரியும்.

**35 வயது மகன்:** ஐ லவ் யூ மம்மி!

**அம்மா:** நான் தான் முன்னயே சொன்னேனே! அந்தப் பொண்ண கல்யாணம் பண்ண வேண்டாம்னு!

**55 வயது மகன்:** ஐ லவ் யூ மம்மி!

**அம்மா:** போடா, நான் எதுலயும் கையெழுத்து போட மாட்டேன்.



# பிரதமர் மோடி எனக்கு வழங்கிய ஆலோசனைகள்



## தேசிய விருது ஆசிரியை ஸதி

ஸதி, இந்த ஆண்டு தேசிய நல்லாசிரியர் விருது பெற்ற மலுமிச்சம்பட்டி ஊராட்சி துவக்கப்பள்ளி தலைமை ஆசிரியர். ஒவ்வொரு ஆண்டும் தமிழகத்தில் இருந்து குறைந்தபட்சம் 20 பேராவது தேசிய விருது பெறுவது வழக்கம். ஆனால், இந்த ஆண்டு இவர் ஒருவரே பெற்றிருப்பது, வரலாற்று நிகழ்வு. ''பாண்டிச்சேரி அரசின் சார்பில், ஆசிரியர்களுக்கான சிறப்பு கூட்டத்தில் பேசுவதற்காக வந்திருக்கிறேன்.

நினைத்தே பார்க்க முடியாத அளவுக்கு அரசு மரியாதை. பெரிய மாளிகையில் விருந்து என தடபுடல் வரவேற்பு. இன்னும் தமிழகத்தின் மூலை முடுக்கெங்கிலும் இருந்து தொலைபேசியில் பேசுகின்றனர். பல ஐஏஎஸ், ஐபிஸ் அதிகாரிகள் வாழ்த்துச் சொல்கின்றனர். பல அமைப்புகள் விருது வழங்க அழைக்கின்றனர். இந்த பெருமைக்கெல்லாம் நான் மட்டும் சொந்தக்காரி இல்லை. இதில் எங்கள் மாணவர்களின் உழைப்பும் இருக்கிறது,'' அடக்கத்துடன் பேசுகிறார்...



- **ஆசிரியர் பணிக்கு விரும்பி வந்தீர்களா? ஏதாவது வேலை கிடைத்தால் போதும் என இத்துறையை தேர்ந்தெடுத்தீர்களா?**

இல்லை. எனக்கு சிறு வயதில் இருந்தே ஆசிரியர் பணியின் மீது பெரிய மரியாதையும் விருப்பமும் இருந்தது. இருக்கிறது. வீட்டில் அனைவரும் ஆசிரியர்களாக இருந்தனர். ஆசிரியர் பயிற்சி முடித்து, டிஆர்பி மூலம் ஆசிரியர் பணிக்கு தேர்வானேன். 23 ஆண்டுகாலம் ஆசிரியராக பணிபுரிந்து, 2012ம் ஆண்டு ஜூலை 29ல் தலைமை ஆசிரியராக பதவி உயர்வு பெற்று, மலுமிச்சம்பட்டி ஊராட்சி ஒன்றிய துவக்கப் பள்ளிக்கு வந்தேன்.

- **எப்படி மொத்த பள்ளியையும் மாற்றிக் காட்டினீர்கள்?**

முதலில், அடிப்படை வசதிகளை உடனடியாக பூர்த்தி செய்ய வேண்டும் என்று நினைத்தேன். கல்வித்துறை, ஊராட்சித்துறைகளிடம் தொடர்ந்து கோரிக்கைகள் வைத்தேன். அரசிடம் இருந்து ஒரு



லட்ச ரூபாய் கிடைத்தது. அது போதுமானதாக இல்லை. எனவே, தனியார் அமைப்புகளிடம் கோரிக்கை வைக்கத் துவங்கினேன்.

தொடர்ந்து போராடியதன் விளைவாக, எங்கள் பள்ளிக்கு மட்டும் இல்லாமல் சுற்றி உள்ள நான்கு பள்ளிகளுக்கும் எல்எண்டி நிறுவனம் நிதி கொடுக்க முன் வந்தது. எங்கள் பள்ளிக்கு மட்டும் ஒரு கோடி ரூபாய் கிடைத்தது. அந்த நொடி என் வாழ்நாளில் மறக்க முடியாத நிமிடம்.

- **கற்பிப்பதில் எந்த வகையில் நவீனத்தை மாற்றம் கொண்டு வந்தீர்கள்?**

பள்ளியில் உள்ள மொத்த வகுப்பறைகளையும் ஸ்மார்ட் கிளாஸாக மாற்றினேன். பவர் பாயின்ட் பிரசண்டேஷன் என்ற முறையை பின்பற்றினேன். ஒன்று முதல் ஐந்து வகுப்பு வரை உள்ள மொத்த பாடத்தையும் இணையத்தில் இருந்து தரவிறக்கம் செய்தோம். அதில், மாணவர்களுக்கு புரியும் வகையில் எளிமையாக கற்பிக்கும் வகையில் வடிவமைத்தோம். இணைய வசதி ஏற்படுத்தினோம்.

நான் தலைமை ஆசிரியராக பொறுப்பேற்ற போது, 146 மாணவர்கள் மட்டுமே படித்த பள்ளியில், இன்று 270 மாணவர்கள் படிக்கின்றனர். இடைநிற்றல் அறவே ஒழிந்து விட்டது.

- **பள்ளியில் மாணவர்களை வைத்து, 'குட்டி கமாண்டோ' படையே வைத்திருக்கிறீர்களாமே?**

மாணவர்களுக்கு சமூக விழிப்புணர்வு ஏற்படவும், மாணவர்களால் சமூகம் விழிப்புணர்வு அடையவும் கொண்டு வரவே, குட்டி கமெண்டோ படையை அமைத்தேன்.

பல மாணவர்கள் உடல் ரீதியான பிரச்சனைக்கு திறந்த வெளியில் மலம் கழிப்பதுதான் என்பதை அறிந்தேன். பள்ளிக்கும் ஊருக்கும் உள்ள பிரச்சனைகள் குறித்து அரசுத்துறைகளிடம் தொடர்ந்து முறையிட்டு வந்தேன். இதனால், அப்பகுதியில், 244 கழிப்பறைகள் கட்டப்பட்டன. கழிப்பறை வசதிகள் இருந்தும், திறந்த வெளியில் மலம் கழிக்கும் மாணவர்களின் பெயர்களை





எழுதி வருமாறு, சிறப்பு கமெண்டோ படை மாணவர்களுக்கு அறிவுறுத்தினேன். இப்போது, மொத்த ஊரிலும் எவரும் திறந்தவெளியில் மலம் கழிப்பதில்லை.

- **வெளிமாநில மாணவர்களும் உங்கள் பள்ளியில் படிக்கிறார்களாமே? இது எப்படி சாத்தியமானது?**

எங்கள் பள்ளியை சுற்றி உள்ள இடங்களில் உள்ள தொழிலாளர்களின் குழந்தைகளை பள்ளியில் சேர்க்க விழிப்புணர்வு ஏற்படுத்தச் சென்றபோது, அங்கு வடமாநிலத்தவர் குழந்தைகளும் படிக்காமல் இருப்பதை அறிந்தேன். அவர்களின் பெற்றோர்களிடம் பேசி, பள்ளியில் சேர்க்கச் சொன்னேன். 42 மாணவர்கள் சேர்ந்தனர். அவர்களுக்கு தமிழ் வழியில் பாடம் கற்பிக்கப்படுகிறது.

தமிழ் மாணவர்களை விடவும், அவர்கள் எளிதாக கற்றுக் கொள்கின்றனர். மொழி புரியவில்லை என்றாலும் அடிப்படைகளை எளிதாக புரிந்து கொள்கின்றனர். தமிழ் மட்டுமே படித்து விட்டு, அவர்களின் சொந்த ஊருக்குச் செல்லும் போது, இந்தி தெரியாமல் கஷ்டப்படக் கூடாது என்பதற்காக எங்கள் பள்ளியில் இந்தியும் சொல்லித் தருகிறோம்.

- **அதிசயமாக இருக்கிறதே... இது எப்படி சாத்தியம்?**

தினந்தோறும் இல்லாமல் வாரத்துக்கு இரண்டு அல்லது மூன்று நாட்கள் இந்தி கற்பிக்கிறோம். பள்ளி முடிந்த மாலை நேரங்களில் இந்தி படிக்க விரும்பும் வடமாநில மாணவர்களுக்கு சொல்லித் தருகிறோம். எனக்கு தெரிந்த அளவில் இந்தியின் அடிப்படைகளை சொல்லித் தந்து கொண்டிருக்கிறேன்.

இரண்டு தன்னார்வலர்கள், அவர்களாகவே முன் வந்து மாணவர்களுக்கு சொல்லித் தந்து கொண்டிருக்கின்றனர். தமிழ் வழியில் படிக்கும் மற்ற மாணவர்களுக்கு விருப்பம் இருந்தால் அவர்களும் படிக்கலாம் என்று சொல்லி இருக்கிறோம். மாணவர்களோடு சேர்ந்து நானும் கற்றுக் கொண்டிருக்கிறேன்.





♦ **பிரதமர் மோடி உங்களிடம் என்ன பேசினார்?**

இந்தியா முழுவதில் இருந்தும் 45 ஆசிரியர்கள் தேசிய விருதுக்கு தேர்ந்தெடுக்கப்பட்டனர். அவர்கள் ஒவ்வொருவரிடமும் பிரதமர் பேசினார். என் முறை வந்த போது, எங்கள் பள்ளி பற்றியும் ஊர் பற்றியும் கேட்டார். மாணவர்களின் இன்றைய நிலை குறித்து விரிவாக விளக்கினேன். அவர் மனதை தொடும் வகையில் நிறைய பேசினார்.

நீங்கள் ஆசிரியர் மட்டுமல்ல. இன்னொரு பெற்றோர். மாணவர்கள் படித்து முடித்தவுடன் அப்படியே விட்டு விடாதீர்கள். அடுத்து என்ன செய்யப் போகிறார்கள் என்று கவனித்து அவர்களுக்கு வழிகாட்டுங்கள் என்றார். அதை விட முக்கியமான விஷயம், திருமணம் என்றால் அவர்கள் அழைக்கவில்லை என்றாலும்கூட செல்லுங்கள். அவர்களுக்கு நீங்கள் இன்னொரு பெற்றோர் என்பதை எப்போதும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள் என்றார்.

டெல்லி, அவர்களுக்கு அனுபவங்கள் மறக்க முடியாதது. என்னை தவிர மற்ற அனைவரும் இந்தியில் பேசினார்கள். நான் எனக்குத் தெரிந்த கொஞ்ச இந்தியிலும் ஆங்கிலத்திலும் பேசினேன்.

♦ **புதிதாக இன்னொரு கமெண்டோ படை அமைக்க இருக்கிறீர்களாமே?**





ஆமாம். அதற்கு கிரீன் கமெண்டோ படை என்று பெயர். மாணவர்கள் தங்கள் வீடுகளில் மரங்கள் வளர்ப்பதை ஊக்குவிக்கும் வகையில் இந்த படை செயல்படும். பள்ளியில் படிக்கும் மாணவர்கள் அனைவருக்கும் மரக்கன்றுகள் வழங்கப்படும். அதை அவர்கள் தினந்தோறும் கவனிக்க வேண்டும். ஆறு மாதங்களில் எவருடைய மரக்கன்று பெரிதாக வளர்ந்திருக்கிறதோ, அந்த மாணவருக்கு சிறப்பு பரிசு வழங்கப்படும்.

இதை அடிப்படையாக வைத்து, ஊர் முழுக்க அதிகளவு மரங்கள் நட திட்டம். சிறு வயதில் இருந்தே இந்த பழக்கத்தை வைத்துக் கொண்டால் பின்னாளில் மொத்த ஊரும் மரங்களுக்கு நடுவே ஜொலிக்கும். மரங்களால் ஏற்படும் நன்மைகள் குறித்து மாணவர்களுக்கு மட்டும் இல்லாமல் பெற்றோர்களுக்கும் விழிப்புணர்வு ஏற்படுத்தி வருகிறோம்.

அதன் முடிவு, மாணவர்களின் கையில் இருக்கிறது. இருந்தாலும், மாணவர்களுக்கு இருக்கும் ஆர்வத்தை பார்க்கும்போது, அவர்கள் ஊரின் நடுவே காடு வளர்ந்தது போன்ற அளவுக்கு மரங்கள் நட்டு, அதை பராமரிப்பார்கள் என்ற நம்பிக்கை இருக்கிறது. நம்பிக்கை இருந்தால் எதுவும் சாத்தியம். அதை என் இத்தனை ஆண்டுகால அனுபவங்கள் வழி உணர்ந்திருக்கிறேன். ●

# ஆரஞ்சுபழமும் நாத்திகனும்

**அவன் ஒரு கடைந்தெடுத்த நாத்திகன். மேடையில்ஏறி பிரசங்கம் செய்கிறான். "அவன் பிரசங்கம் செய்தால் பிணம் கூடத் துடிக்கும்" என்று அவன் கட்சிக்காரர்கள் அவனைப் பெருமையோடு புகழ்வார்கள்.**

"கடவுள் இல்லை, மதம் இல்லை, வேதமோ, புராணமோ, எதுவுமேயில்லை. மதத் தலைவர்கள், தங்கள் வயிற்றுப் பிழைப்புக்காக உண்டாக்கிக் கொண்ட கட்டுக்கதைகள்" என்று வாய்ஜாலத் திறமையுடன் சாதுரியமாகப் பிரசங்கித்துக் கொண்டிருக்கிறான்.

அவனுடைய பேச்சுத் திறமையைக் கண்டு ஜனங்கள் திரள் திரளாகக் கூடிவிட்டார்கள். கடைசியாக..., "கடவுளுமில்லை, கத்திரிக்காயுமில்லை, எல்லாம் பித்தலாட்டம்" எனச் சொல்லி முடித்துவிட்டு, "யாராவது கேள்வி கேட்க வேண்டுமானால் மேடைக்கு வரலாம்" என்றும் அழைத்தான்.

அந்நகரில் எல்லோருக்கும் நன்கு தெரிந்த பெரிய குடிகாரன் ஒருவன், மேடைமீது ஏறினான்! தன் கோட்டுப் பாக்கெட்டிலிருந்து ஒரு ஆரஞ்சுப் பழத்தை எடுத்து, தோலை மெதுவாக உரித்தான்"!

"கேட்க வேண்டிய கேள்வியை கேட்காமல் பழத்தை உரிக்கிறாயே"எனக் கோபங் கொண்டான் நாத்திகன்.

பழத்தை உரித்தவன் சுளை சுளையாகத் தின்று கொண்டே"பொறு....! பொறு....! தின்று முடித்து விட்டுக் கேள்வியைக் கேட்கிறேன்" என்று சொல்லியவாறு ரசித்துத் ஆரஞ்சு பழத்தை தின்று கொண்டிருந்தான்.

தின்று முடித்த பின்பு நாத்திகனை நோக்கி, "பழம் இனிப்பாய் இருக்கிறதா?எனக் கேட்டான்.

"பைத்தியக்காரனே, நான் தின்று பார்க்காமல் பழம் இனிப்பா, இல்லை புளிப்பா என்று எவ்வாறு சொல்லமுடியும்"என்றான் நாத்திகன் ஆங்காரத்துடன்!

"கடவுள் யார்...? அவர் எப்படிபட்டவர்.....? அவரின் ஆற்றல் என்ன...? என்பதை நீ பக்தி மார்க்கத்தில் ஈடுபட்டு பார்த்தால் தானே உனக்குத் தெரியும். இப்ப நான் சாப்பிட்ட ஆரஞ்சு பழத்தின் சுவையை பற்றியே உன்னால் தெரிந்து கொள்ள முடியாதபோது, பல ஆயிரம் வருடங்களாக நம் மூதாதையர் வணங்கி வழிபட்டு, நமக்கு வழிகாட்டி பாரம்பரியமாக கொண்டாடிவரும் கடவுளை இல்லை என்று எவ்வாறு சொல்லுவாய்? அனுபவித்து, ருசித்துப் பார்க்காமல் ஏன் உளறுகிறாய்" என்றான் அந்த மொகாக்குடிகாரன்!

கூடி இருந்த ஜனங்கள் கைத்தட்டி ஆரவாரம் செய்தார்கள். ஒரு பெரிய கூட்டமே நாம் சொன்னதை வாயைப் பொத்தி கேட்டுக் கொண்டிருக்க, "இந்த குடிகாரப்பய நம்மையே மடக்கிவிட்டானே" என நாத்திகன் மூக்கறுபட்டு தலைகுனிந்து போனவன் போனவன் தான்.......!!

# பைக் ஓட்டத் தெரியுமா?

**இளைஞன் ஒருத்தன் புதுசா ஒரு யமஹா பைக் வாங்கி டெலிவரி எடுத்துகிட்டு ரோட்டுல வந்தான். அப்ப ரோட்டுல ஒரு பெரிய பணக்காரரு தன்னோட பெர்ராரி காருல போய்கிட்டு இருந்தாரு.**

அவருக்கு இணையா காருகிட்ட வந்தவன், "முன்ன பின்ன யமஹா ஓட்டியிருக்கிங்களா?" அப்படின்னு கேட்டான்.

அவரு நெனச்சாரு, "என்னடா நாம பெர்ராரில போறோம், இவன் இப்படி கேக்குறானே" அப்படின்னு பதில் சொல்லாம வேகமா போயிட்டாரு..

நம்மாளு விடாம வேகமா துரத்தி போய் மறுபடியும் "முன்ன பின்ன யமஹா ஓட்டியிருக்கிங்களா?" அப்பபடின்னு கேட்டான். அவரு, இது என்னடா லூசு. அப்படின்னு பதில் சொல்லாம வேகத்த கொறச்சிகிட்டாரு.

ஆனா நம்மாளு அதே வேகத்துலமுன்னாடி போய்ட்டான்.



ஒரு 10 நிமிஷம் கழிச்சி பெர்ராரில போனவரு ஒரு எடத்துல ரோட்டோரம் கூட்டாமா மக்கள் நிக்கிறத பார்த்து ஒரு ஆர்வத்துல வண்டிய ஓரம் கட்டிட்டு வந்து பார்த்தாரு..

பார்த்தா நம்ம யமஹா பைக்ல வந்தவன் விழுந்து வாரிகிட்டு நொறுங்கிபோய் கிடந்தான்..

அவ்வளவு சேதாரத்துலயும் காருக்காரர அடையாளம் பார்த்து அவன் முனங்கி சொன்னான்,

"நான் தான் 'முன்னபின்ன யமஹா ஓட்டியிருக்கிங்களா?' அப்படின்னு கேட்டேனே.. தெரியும்னு ஒரு வார்த்தை சொல்லி இருந்தா, அதுல ப்ரேக்கு எங்க இருக்குன்னு கேட்டு, அத பயன்படுத்தி வண்டிய நிறுத்தி இருப்பேன்.. இவ்வளவு அடி பட்டுருக்காதே...!"

▪ கிரண்யா

# ஆங்கிலம் கலக்காமல் தமிழில் பாடல் எழுதத்தான் விருப்பம்

## - பாடலாசிரியர் விவேகா



**பத்திரிகையாளராக இருந்து சினிமா பாடலாசிரியராக மாறியவர் கவிஞர் விவேகா.**

**"நீ வருவாய் என" என்ற படத்தில் "பூங்குயில் பாட்டு பிடிச்சிருக்கா" என்ற பாடலின் மூலம் தமிழ்த் திரையுலகப் பாடலாசிரியராக அறிமுகமானார். தொடர்ந்து பல படங்களில் எழுதி வந்தாலும், "கந்தசாமி" படம், இவருக்கு மிகப்பெரிய திருப்பு முனையை ஏற்படுத்தியது.**

**இப்படத்தின் அனைத்துப்பாடல்களும் மிகப்பெரிய வெற்றியாக அமைந்தது. இதைத் தொடர்ந்து ஏறுமுகம் தான்.. சமீபத்தில் வெளிவந்த 'வேலைக்காரன்' படத்தில்" கருத்தவன்லாம் கலீஜாம்" பாடலோடு இரண்டாயிரத்துக்கும் அதிகமான பாடல்கள் எழுதியுள்ளார்.**

**அவருடன் ஒரு சந்திப்பு:**

♦ எப்படி இந்த திரைத்துறைக்கு வந்தீங்க?

பள்ளி, கல்லூரி நாட்களில் நிறைய கவிதை எழுதுவேன். மாநில அளவிலான கவிதைப் போட்டியில் முதலாவதாக வந்து, அப்போதைய முதல்வர் கருணாநிதியிடம் பரிசு வாங்கியிருக்கேன்.

நண்பர்கள் என்னிடம் ஏன் சினிமாவிற்கு பாட்டு எழுதக்கூடாது என்று கேட்டார்கள். பிறகு சென்னை வந்தேன். ஒரு ஆண்டு தேடுதலுக்குப் பிறகு, "நீ வருவாய் என படத்தில் பூங்குயில் பாட்டு பிடிச்சுருக்கா என்ற பாடல் மூலம் பாடலாசிரியராக அறிமுகமானேன்.




♦ இவர் இல்லனா இந்த வாய்ப்பு எனக்கு சாத்தியமே இல்லை என்று? யாரைச் சொல்வீங்க?

யாரும் என்னை அழைத்துக் கொண்டு போகவில்லை. எதேச்சையாக அமைந்த வாய்ப்பு இது. வில்லன் நடிகர் சம்பத்குமார் ஒரு படத்தில் வாய்ப்பு கேட்டு போகும் போது நானும் துணைக்கு போனேன்.

அங்க எதேச்சையாக இயக்குநர் ராஜகுமாரனை நான் சந்தித்தேன். பாடல் எழுதுற ஆசையில் இருக்கேன் என்று சொல்ல, அவர் என் கூட ரொம்ப நேரம் பேசினார். ஒரு நாள் நள்ளிரவு என்னை போனில் அழைத்து, "காலைக்குள் எனக்கு பாடல் வேணும்" என்று சொன்னார். அதை முடித்து கொடுத்தேன். இனிமையான தருணம் அது.

♦ நீங்க எழுத ஆரம்பித்த புதிதில் இருந்த சினிமாத்துறைக்கும், இப்ப இருக்கிற சினிமாத்துறைக்கும் என்ன வித்தியாசம்?மாற்றம் இருக்கிறதா?

இப்போது நிறைய மாறி இருக்கிறது. இப்போது இயக்குநர்கள் பல்வேறு தருணங்களில் தங்களை புதுப்பித்துக் கொண்டு வருகிறார்கள். எதார்த்த படங்களின் எண்ணிக்கை கூடி இருக்கிறது.

இன்றைக்கு தமிழ் சினிமா நல்ல நிலைமைக்கு வளர்ந்திருக்கிறது. ஒரு காலத்தில் மலையாள சினிமாவைத்தான் சிறந்த சினிமா என்று

சொல்வார்கள். இப்போ தென்னிந்தியாவில் தமிழ் சினிமாவிற்கு நல்ல அடையாளம் கிடைத்திருக்கிறது.

- **நீங்கள் எழுதின பாடல் வரிகளில் என் மனதுக்கு பிடித்த நெருக்கமான வரிகள் என்று எதை சொல்வீர்கள்?**

அப்படி இல்லை. என் மனதிற்கு பிடித்த நெருக்கமான வரிகளைதான் எழுத முடியும். நான் 2 ஆயிரம் பாடல்களை தாண்டி எழுதியிருக்கிறேன். எல்லா பாடல்களும் எனக்கு பிடித்தமான பாடல்தான். சில பாடல்கள் வெற்றி அடைந்திருக்கலாம். சில பாடல்கள் வெற்றி அடையாமல் இருந்திருக்கலாம்.

வெற்றி அடைந்த பாடல்கள் மீது கூடுதல் ஈடுபாடு இருக்கும். அப்படின்னு பார்த்தால் சமீபத்தில், வேலைக்காரன் படத்தில், "கருத்தவன்னா கலீஜா" பாடல். எல்லா பாடல்களுமே என் மனதிற்கு நெருக்கமான பாடல்கள்தான்.

- **ரன் படத்தில் "மின்சாரம் என் மீது பாய்கின்றதே" பாடலை எழுதியிருக்கிறீர்கள். "டாடி, மம்மி வீட்டில் இல்லை" பாடலையும் எழுதியிருக்கிறீர்கள். இந்த மாதிரியான பாடல்களை எழுதும்போது வரும் விமர்சனங்களை எப்படி எடுத்துக்கொள்கிறீர்கள்?**

ஏராளமான மெல்லிசைப் பாடல்களை எழுதியிருக்கிறேன். வில்லு படத்தில் டாடி மம்மி பாடல் மிகப்பெரிய வெற்றி அடைந்தது. பிறகு கந்தசாமி படத்தில் அனைத்து பாடல்களையும் எழுதினேன். அந்த படத்தில் எல்லா பாடல்களும் மெல்லிசையே கிடையாது. அதில் எல்லா பாடல்களுமே குத்துப் பாட்டு. அந்த பாடல்கள் மிகப்பெரிய வெற்றி அடைந்தது.

ஒரு எப்.எம். ரேடியோ முதலாளி, "இது உங்க எப்.எம்.மா? இல்ல கந்தசாமி எப்.எம்.மான்னு கேட்கிறார்கள். அந்த அளவிற்கு நாங்கள் பாடல்களை போட்டு போட்டு அடிச்சிக்கிட்டே இருப்போம். சமீபத்தில் இப்படிப்பட்ட முழு ஆல்பத்திற்கான வெற்றியை பார்த்ததே இல்லை" என்று சொன்னார்கள். குமுதத்தில் என்னைப் பற்றிய ஆடியோவே, அவ்வளவு பெரிய வெற்றியை கொடுத்தது.

பிறகு எல்லாரும் குத்துப் பாடல்களுக்காகவே






என்னிடம் வந்தார்கள். மெல்லிசை ரசிகன் நான். எல்லாவிதமான பாடல்களும் எழுதுவேன். விமர்சனங்கள் வரத்தான் செய்கிறது. எதை பார்த்தாலும் அதை திட்டுவதற்கு 4 பேர் இருப்பார்கள். அதையெல்லாம் நாம பாத்துக்கவே முடியாது.

டிவிட்டர்ல போனா மகாத்மா காந்தியை திட்டுவதற்கே ஆட்கள் இருப்பார்கள். அன்னை தெரசாவை திட்டுவதற்கே ஆயிரம் பேர் இருப்பார்கள். விமர்சனங்கள் இருக்கும். அது சரியான விமர்சனங்களாக இருந்தால் திருத்திப்பேன்.

- **இப்போது தமிழ் பாடல் வரிகள் குறைந்து போய்கொண்டிருக்கிறது. தமிழில் ஆங்கிலம் கலந்த பாடல் வரிகள் வருகின்றன. அதைப் பற்றி சொல்லுங்கள்?**

எந்த இயக்குநர்களிடமும் நான் ஆங்கில வார்த்தைகளை போடட்டும்மான்னு கேட்கிறதே இல்லை. பிற மொழியை தவிர்த்து எழுதுவதற்குதான் ஆசைப்படுவேன். சில இயக்குநர்கள் அவர்களாகவே கேட்பார்கள். இதில் ஆங்கிலம் கலந்து எழுத முடியுமான்னு. இயக்குநர்கள் கேட்டால் எழுதி கொடுப்பேன். மிகவும் ஆங்கிலம் கலக்காத தமிழ் பாடல் வரிகளை எழுதவே ஆசைபடுகிறேன்.

- **நீங்கள் குறிப்பிட்ட இடத்தில்தான் பாடல்களை எழுதுவீங்களா.. இல்லை எங்கே வேண்டுமானாலும் இடம் கிடைத்தால் பாடல்கள் எழுதுவீர்களா?**

எங்கே வேணாலும் எழுதுவேன். என்னுடைய பலம் அதுதான். கந்தசாமி பட பாடல்கள் இயக்குநர் எதிரிலேயே அமர்ந்து எழுதுனதுதான். "ஒரு சின்ன தாமரை" பாடல் விஜய் ஆண்டனி எதிரிலேயே எழுதுனதுதான். "என் பெயரு மீனாகுமாரி" பாடல்கள் 10 நிமிடத்தில் முடித்த பாடல்.

- **சமீபத்தில் நீங்கள் ரசித்த வரிகள் எது?**

அப்படி எனக்கு சூழ்நிலை கிடைக்கவில்லையேன்று என்று நினைத்து ரசித்த பாடல் "ஆனந்த யாழை மீட்டுகிறாள்" பாடல் வரிகள்தான். தேசிய விருது பெற்ற பாடல்களிலேயே நான் பார்த்து வியந்த பாடல். இந்த பாடல் மட்டுமே. அந்த பாட்டு என்னை வேறு ஒரு தளத்தில் கொண்டு போய் வைத்தது.



■ விஜி ராஜா

# “ஆன்மீகத்தையும், அரசியலையும் ஒப்பிட வேண்டிய அவசியம் இல்லை”

## “சொல்லின் செல்வர்” சுகி சிவம்



சுப்பிரமணியம் சதாசிவம், சுருக்கமாக சுகி.சிவம். தமிழை நேசிக்கும் அனைவருக்கும், இந்த பெயர் பரிச்சயமானது. ஆன்மிகவாதி, சமயச் சொற்பொழிவாளர், எழுத்தாளர், பட்டிமன்ற நடுவர் என பன்முகம் கொண்டவர். ‘சொல்வேந்தர்’ என அழைக்கப்படும் சுகி சிவம், உலகம் முழுவதும் சுற்றி சொற்பொழிவாற்றி வருபவர்.

“மௌனமாக இருக்கும் போது ரமணராகவும், கர்ஜிக்கிறபோது விவேகானந்தராகவும் இருப்பது என் இயல்பு”என்று, தன்னைப் பற்றிப் குறிப்பிட்டிருக்கிறார்.

இந்து மதக் கருத்துகளின் அடிப்படையில், வாழ்க்கையை அமைத்துக்கொள்ள விரும்புபவர்களுக்கு உதவும் நோக்கில், ‘இந்து தர்மவித்யா பீடம்’ என்னும் அமைப்பை சுகி. சிவம் உருவாக்கி நடத்தி வருகிறார்.

அவ்வமைப்பின் வழியாக, ‘வாழும் கலை’ என்னும் பயிற்சியை நடத்தி வருகிறார். சமீபத்தில், அமெரிக்கா வந்திருந்த அவருடன் ஒரு சந்திப்பு.

- **அமெரிக்காவில் இன்று விநாயகர் சதுர்த்தி. இந்துக்களை பொறுத்த வரை, எந்த நிகழ்ச்சி தொடங்கினாலும், பிள்ளையாரை வணங்கிதான் தொடங்குகிறார்கள். நீங்களும் அப்படித்தான்! எதனால அப்படின்னு சொல்ல முடியுமா?**

இறைவனை நினைத்துக் கொள்வது, நல்லது. பிள்ளையார் சுழியை உற்றுப் பார்த்தால் தெரியும். ஒரு சுழி இருக்கும். ஒரு கோடு இருக்கும். இரண்டும் ஒன்றாகும்போது, படைப்பு உருவாகிறது என்பது அங்கிருந்து தான் தொடங்குகிறது. ஏதோ ஒன்றை, சொல்வதற்கான முயற்சி மாதிரி, இந்த பிள்ளையார் சுழி அமைந்திருக்கும். அதனால், எந்தப் படைப்பு எங்கிருந்து தொடங்குகிறதோ, அதற்கு முதல் வணக்கம். அப்படி விநாயகர் வழிபாடாக தொடங்கியிருக்கும். ஒவ்வொருவரும், தங்களுக்கு எந்த கடவுளைப் பிடிக்கிறதோ, அந்தக் கடவுளை வணங்குகிறார்கள். ஆனால், விநாயகர் வழிபாடு என்பது முக்கியத்துவம் வாய்ந்தது.

- **நீங்கள், சிறந்த பட்டிமன்ற பேச்சாளர். பொருளாதாரமும், சட்டமும் படித்திருக்கிறீர்கள். தன்னார்வ சேவை நிறுவனத்தையும் நடத்தி வருகிறீர்கள். இந்த துறைகளில் உங்களின் மனதிற்கு நெருக்கமான துறை எது?**

எல்லாமே பிடித்ததனால் தான், எல்லாத்தையும் செய்து கொண்டிருக்கிறேன். நம்முடைய கருத்துக்களை, மக்களுக்கு கொண்டு போகிறோம். நற்பணிகளால், மனதிற்கு ஒரு நல்ல தொடர்பு. அதனால் மனதிற்கு பிடித்த துறை தான்.







- **ஆன்மிகத்தையும், அரசியலையும் ஒப்பிட்டுப் பார்க்க முடியுமா?**

ஒப்பிடவேண்டிய அவசியமே, இல்லை. ஆன்மிக அரசியல் என்ற வார்த்தை பாப்புலர் ஆனதால் அதைப் பற்றிய கேள்வி உண்டாகிறது. நான் வேறு ஒரு, தனியார் ஊடகத்தில் பேசும்போது, "இந்த வார்த்தையை எந்த அர்த்தத்தில் கேட்கிறீர்கள்" என்று கேட்டேன்.

எங்களை மாதிரி இருக்கிறவர்களுக்கு, எந்த மாதிரியான சிக்கல் என்றால், அதை சொன்னால் அது சர்ச்சையாகும். சில பேரால், விமர்சிக்கப்படும். ஆனால், உண்மையாக நாங்கள் எந்த நோக்கத்தில் சொல்கிறோம் என்பதை உணரக்கூடிய மக்கள் குறைந்த சதவீதம். ஒரு தோல் நோய் வந்தால் அதை நீக்குவதற்கு மக்களிடம் அக்கறை கிடையாது. ஆன்மிக அரசியல் என்றால், மத உணர்வு கொண்ட அரசியல் கட்சி என்று நினைப்பார்கள். அப்படி கிடையாது. தனிமனித வழிபாடு என்பதையெல்லாம் தாண்டி, நிறை குறை இருக்கிறது. நாம் கொஞ்ச நாள் இருக்க போறோம். இருக்கின்ற நாட்களில், எப்படி நல்லது செய்யலாம். இதை கருத்தில் கொண்டு ஒரு அரசியல் உருவானால் அது ஆன்மிக அரசியல்.

- **நீங்கள், முதன் முதலில் மேடையில் பேசும்போது, இந்த துறையில் தான் கால் பதியணும் என்று நினைத்தீர்களா? உங்களின் முதல் அனுபவம்?**

அப்படித் துல்லியமாக சொல்ல முடியாது. பள்ளிக்கூடக் காலங்களிலிருந்தே, பேச்சு போட்டி மூலம் நான் மேடைக்கு வந்தேன். மேடை, எனக்கு இன்னொரு தாய்மடி. எவ்விதமான தயக்கமும் எனக்கு கிடையாது. மேடை ஏறுவதில் பயம் எதுவுமே இல்லை. 6ம் வகுப்பு படிக்கும்போதே, மேடை ஏறினேன். பின்னர், எஸ்.எஸ்.எல்.சி, கல்லூரி, சட்டக்கல்லூரியில் என எல்லா இடங்களிலும் மேடையேறி இருக்கிறேன். மேடை பயமே எனக்கு கிடையாது. அந்த மாதிரியான வாய்ப்பு எனக்கு கிடைத்தது.

- **நீங்கள், நிறைய மேடை பேச்சுக்கள் பேச ஆரம்பித்த பிறகு, சிங்கப்பூரில் நடந்த 'சவாலே சமாளி' என்ற நிகழ்ச்சி தான், உங்களை வெளி உலகத்திற்குக் கொண்டு வந்தது என்று கூடசொல்லலாம். அந்த நிகழ்ச்சியில் நடந்த சம்பவம், அனுபவம் ஏதாவது உங்கள் ஞாபகத்திற்கு இருக்கிறதா?**



ஆயிரம் பேர் கூடின ஸ்டேடியம் அது. அப்போ நான், வெளியில் அதிகமா அறியப்படுகின்ற மனிதர் அல்ல. வைரமுத்து நல்ல பாடலாசிரியர். வெளிச்சத்திற்கு வந்துவிட்டார். சாலமன் பாப்பய்யா. அவரும், சன் டிவி மூலமா வெளிச்சத்திற்கு வந்துவிட்டார். அவர்கள் கூட போகும்போது, அவர்களுக்கு கிடைக்கின்ற பளபளப்பும், வெளிச்சமும் எனக்கு கிடையாது.

என் மனதில் எப்போதுமே, ஒருவிதமான வைராக்கியம் உண்டு. நாம் நல்லது சொல்றோம். கேட்க நினைக்கிறவர்கள் கேட்கலாம். நாம எந்த கெட்ட எண்ணத்தையும் விதைக்கிறதுக்காக

வரவில்லை. சொல்ல வேண்டிய காரியத்தை, உரக்க சொல்லணும் என்று நினைத்தேன். முதல் பேச்சு என்னுடையது என்பதால், என்னுடைய பேச்சு ரொம்ப அழுத்தமாக இருக்கும். 'சவாலே சமாளி' என்ற குறுந்தகடு, மிகப் பெரிய அளவில் கொண்டு சென்றது.



- **நிறையத் திறமை இருந்தாலும், நம்மால் வெளிய வரமுடியவில்லை என்று நினைப்பவர்கள் நிறைய பேர் இருக்கின்றனர். சிலர் தன்னம்பிக்கை இல்லாமல் இருக்கின்றனர்? இவர்களுக்கு நீங்கள் என்ன அறிவுரை சொல்வீர்கள்?**

முதலில் அறிவுரை என்று எடுத்துக் கொள்ள விரும்பவில்லை. அவர்களுக்கு ஆறுதல், நட்பு தேவைப்படும். இதமான நட்பு தான் அவர்களுக்கு பேசும். உள்ளே இருக்கின்ற திறமையை வெளிக்கொண்டு வர, தன்னம்பிக்கையை விதைக்க வேண்டியிருக்கிறது. சரியாக சொல்ல வேண்டும் என்றால், ஒரு தாய் பறவை குஞ்சுகளுக்கு செய்யும் பெரிய உதவி. அவைகளுக்கு, நாள்தோறும் உணவு கொண்டு வரவேண்டியது அல்ல. "உனக்கு சிறகு இருக்கிறது என்பதை ஞாபகம் படுத்துவதே!.

"நாள்தோறும் சாப்பாடு தருவேன் என்று எதிர்பார்க்காதே. உன் இறக்கையை அடித்துப் பறப்பதற்கு முயற்சி செய்" என்று சொல்லும். இறக்கையை அடித்துக் காண்பிக்கும். ரொம்ப நாள், அந்த குஞ்சு அந்த காரியத்தை செய்யாமல் இருந்தால், தாய் பறவை கூட்டிலிருந்து தள்ளி விடும். அப்போ போகும்போதுதான், அந்த இறக்கையை அடித்து பறக்க வேண்டும் என்ற நிலை வரும். தனக்குள் சக்தி இருக்கிறது என்பது நினைவுக்கு வரும்.

அப்படி செய்ய ஆரம்பித்தால், தானாக வந்துவிடும். அதுபோலத் தான் மனிதர்களுக்கும். அவர்களிடம் இருக்கும் சக்தியை உணர்த்த வேண்டும். இன்னொன்று, அவர்களை ஊக்குவிக்கும்போது, அவர்களிடம் சொல்ல வேண்டிய டெக்னிக், "கஷ்டபடும் நான்கு பேர்களுக்கு அறிவுரை சொல்லு"ன்னு சொல்ல வேண்டும். "என்ன சார்.. நானே கஷ்டப்படுறேன். எப்படி மற்றவர்களுக்கு அறிவுரை சொல்வது" என்று கேட்பார்கள்.

அடுத்தவர்களுக்கு அறிவுரை சொல்லப் போகும்போது தான், நமக்கு அது பளிச்சென்று தெரியவரும். நானே இதே பிரச்சனையில்தானே இருக்கிறேன் என்ற கேள்வி எழும். இதை எப்படி சரி செய்து கொண்டு மேலே வரலாம் என்ற விடை கிடைக்கும்.

- **உங்கள் சொற்பொழிவில் நிறைய, முன்னேற்ற கருத்துக்கள் தான் இருக்கிறது. ஒரு முறை செயல்படுங்கள் என்றும், இன்னொரு முறை அமைதியாக இரு, பேசாமல் இரு என்றும் சொல்கிறீர்கள். இந்த இரண்டும் முரண்பாடு கொண்டது. இந்தக் கருத்து எங்களுக்கு முரண்பாடாக தெரிகிறது. அதைப் பற்றி சொல்லுங்கள்?**

குடும்ப வாழ்க்கையில், சண்டை போடுகின்ற கணவன், மனைவி இருப்பார்கள். வடதுருவம், தென்துருவமாக இருப்பார்கள். வடதுருவம், தென்துருவம் இரண்டும் நம்ம பூமியில்தான் இருக்கிறது. ஒவ்வொரு மனிதனுக்குள்ளேயேயும், ஒரு முரண்பாடு உண்டு.

எல்லா மனிதர்களுக்கு இடையேயும் எதிரெதிரான கருத்துவேறுபாடு இருக்கிறது. திருவள்ளுவர் எப்படி எதிரெதிரான கருத்துக்களை மக்களுக்கு எடுத்துரைத்து மருந்து கொடுத்தாரோ, நான் அந்த பரம்பரை. மக்களுக்கு என்ன வேணுமோ, அப்பப்போ அந்த மருந்தைக் கொடுப்பேன்.

- **எல்லா பணியிடங்களிலும், பெண்கள் நிறைந்திருக்கிறார்கள். கஷ்டப்பட்டு முன்னுக்கு வருகிறார்கள். ஆனால், அவர்கள் கேவலமாக விமர்சனத்துக்கு உட்படுகிறார்கள். இதைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?**

அவர்களின் முன்னேற்றத்தை கெடுப்பதற்கு, எதையாவது சொல்லி, அவர்களை அசிங்கப்படுத்துவதற்காக விமர்சனம் செய்கிறார்கள். விமர்சனத்தை எதிர்கொள்ளும்போது, தெளிவாக இருக்க வேண்டும். விமர்சனங்கள் யாரால் செய்யப்படுகின்றன என்று பார்க்க வேண்டும்.

மற்றவர்களை சொல்வதற்கு அவர்களுக்கு என்ன யோக்கியதை இருக்கிறது என்று பார்க்க வேண்டும். தேவையற்ற விமர்சனங்களை நாம் பொருட்படுத்தக்கூடாது.

ஒரு பன்றி இருக்கிறது. அந்த பன்றி தன் நாக்கால் மலத்தை சாப்பிட்டு சுத்தம் செய்துவிடுகிறது. அதுபோல் மற்றவர்களின் குறைகளை பேசி பேசி பன்றி போல் சுத்தம் செய்துவிடுகிறார்கள்.



- **புத்தகங்கள் படிக்கும் சூழ்நிலையை எப்படி நாம் அதிகப்படுத்துவது?**

இப்ப இருக்கிற காலக்கட்டத்தில் புத்தகத்தை படிக்கும் சூழ்நிலை குறைந்துதான் போயுள்ளது. எனர்ஜி வேஸ்ட் ஆகாம புதியதில் எப்படி பழையதை கொண்டு வரலாம்ன்னு யோசிக்கணும்.

- **இங்க இருக்கின்ற தமிழர்களின் வாழ்க்கை முறை பிடித்துள்ளதா அல்லது தனி மனித ஒழுக்கம் பிடித்துள்ளதா?**

அவர்களுடைய வாழ்க்கையை அவரவர்தான் தீர்மானிக்கணும். இந்தியாவில் உள்ள தமிழ், இலக்கியம் எல்லாம் இங்குள்ளவர்களுக்கு நன்றாக வருகிறது. நம்முடைய தமிழ் மொழியை இழந்துடுவோமோ, மறந்துடுவோமோ என்று எண்ணம் இங்குள்ளவர்களுக்கு இருக்கிறது. அதனால் எல்லா திருவிழாக்களை கொண்டாடலாம் என்ற எண்ணம் இங்குள்ள தமிழர்களிடம் இருக்கிறது. இந்த வாழ்க்கை தவறுன்னு சொல்லமாட்டேன். நம்முடைய மண் மேலே ஒரு அன்பும், மரியாதையை இருக்க வேண்டும்.

- **இங்கு இருக்கும் அமெரிக்க தமிழர்கள் ஆன்மிகத்தை கனப்படுத்த வேண்டும் என்று நினைக்கிறார்கள். அவர்களுக்கு நீங்கள் கூறும் அறிவுரை?**

ஆன்மிகம் மிக பெரிய விஷயம். பக்தியை சார்ந்தது ஆன்மிகம் என்று நினைக்கிறார்கள். பக்தியோகம், கர்மயோகம், ராஜயோகம், ஞானயோகம் என்பதில், பக்தியோகம் என்பது நான்கில் ஒரு பங்கு தான். நான்கில் ஒரு பங்கை மட்டும் வைத்துக்கொண்டு மற்ற மூன்றையும் விட்டுவிடுகிறார்கள். அதற்குரிய அர்த்தம் புரியவில்லை. இந்த மூன்றையும் புரிந்து கொள்ள வேண்டும்.

- **விதியை மதியால் வெல்லலாம்ன்னு சொல்றாங்க. அதைப் பற்றின உங்களுடைய பார்வை?**

உடம்பில் சில விஷயங்கள் பதிவாகியிருக்கும். மனதில் சில விஷயங்கள் பதிவாகியிருக்கும். இதுமாதிரியான புரோகிராம் செய்யப்பட்ட விஷயம்தான் விதி. ஆனால், இதை தாண்டி நம்மால் போக முடியும். நான் உடம்பு அல்ல. நான் மனம் அல்ல. நான் உடம்பிற்கும், மனதிற்கும் அப்பாற்பட்டு சாட்சியமாக பார்க்கிற நபர் என்று






கண்டுபிடித்தால்தான் இந்த இரண்டையும் வெல்ல முடியும்.

நான் உடம்பு என்று நினைக்கிற வரைக்கும் விதி வேலை செய்யும். மனம் என்று நினைக்கிற வரையில் விதி வேலை செய்யும். நான் உடம்பும் அல்ல, மனதும் அல்ல, என்ற தெளிவு, இந்த உடம்பையும், மனதையும் வேடிக்கை பார்க்கின்ற சாட்சியமான ஆன்மா நான் என்று, எப்போது துடிக்கிறதோ அப்போதான் விதியை வெல்ல மதி வேலை செய்யும்.

- **உறவில் நிறைய பிரச்சனை வருகின்றன. குன்றத்தூரில் அபிராமி என்ற பெண் இரண்டு குழந்தைகளை கொன்று இருக்கிறார். இந்த சம்பவத்தை எந்த கோணத்தில் பார்க்கிறீர்கள்?**

தன்னை மட்டுமே சிந்தித்து வாழ்கிறவர்கள் குடும்ப வாழ்க்கையில் ஈடுபடக்கூடாது. குடும்பம் என்பது ஒரு கூட்டு நிறுவனம். மனைவிக்கு கணவன்தான் முக்கியம். கணவன், மனைவிக்கு குழந்தைகள் முக்கியம். தன்னை மட்டும் சிந்திக்கிறவங்க யாருமே கல்யாணம் பண்ண கூடாது.

கல்யாணம் பண்றாங்க. கல்யாணம் முடிந்ததும் இந்த மனுஷன் இது சரியில்லை. அது சரியில்லை என்று சொல்கிறார்கள். இந்த பொண்ணு கொன்னுடுச்சு. சில பேர் கொல்லாமல் கொல்லுவாங்க. பேச்சால் கொல்லுவார்கள். பெண்மை, தாய்க்கு இருக்கின்ற மதிப்பு குறைந்து கொண்டு வருகிறது. அதே போல் ஆண்மை. அதன் வெளிப்பாடுதான் இந்த மாதிரியான செயல்களில் ஈடுபடுவது. எல்லா பெண்களும் கெட்டவர்கள் இல்லை. எல்லா ஆண்களும் கெட்டவர்கள் இல்லை. ●

# உங்களுக்குள் இருக்கிறது சந்தோஷம்!

ஹரி

**அரசன் ஒருவன் ஞானியிடம், "என்னால் நிம்மதியாக இருக்க முடியவில்லை!" என்றான்.**

"உன் கடமையை நீ சரியாகச் செய்கிறாயா?" என்று ஞானி கேட்டார்.

"என் நாட்டிற்குப் பகைவரால் போர் அபாயம் இல்லை. கள்வர் பயமும் இல்லை. முறையாக, நீதி வழங்கப்படுகிறது . அதிக வரிகள் விதிப்பதில்லை. அதனால், நாட்டு மக்கள் மகிழ்ச்சியோடு வாழ்கிறார்கள். ஆனால், என் மனத்தில் மட்டும், அமைதி இல்லை. இந்த அரச பதவியில், எனக்கு நிம்மதி கிடைக்கவில்லை " என்றான்.

"அப்படியானால் ஒன்று செய். உன் நாட்டை, என்னிடம் கொடுத்துவிடு!" என்றார் ஞானி.

"எடுத்துக் கொள்ளுங்கள்" என்று, உடனே சொன்னான் மன்னன்.

"நீ என்ன செய்வாய் ?" என்று கேட்டார் ஞானி.

"நான் எங்காவது போய், ஏதாவது வேலை செய்து பிழைத்துக்கொள்கிறேன்" என்றான் அரசன்.

"எங்கோ போய், தெரியாத வேலையை செய்வதை விட, என்னிடமே வேலை செய். உனக்குத் தெரிந்தது நாட்டை ஆட்சி செய்வது. அதையே செய். என் பிரதிநிதியாக மட்டும், நீ நாட்டை ஆண்டு வா. நான் பிறகு வந்து கணக்கு, வழக்குகளைப் பார்க்கிறேன் " என்றார், ஞானி.

"சரி!" என்றான், மன்னன்.

ஒரு ஆண்டு கழிந்த பின், ஞானி அரசனைக் காண வந்தார். அவரை வரவேற்று உபசரித்த அரசன், நாட்டின் கணக்கு வழக்குகளை எல்லாம், மகிழ்ச்சியாக எடுத்துக் காட்டினான்.

"அது கிடக்கட்டும்" என்ற ஞானி, "நீ இப்போது எப்படி இருக்கிறாய்?" என்று கேட்டார்.

"நிம்மதியாக சந்தோஷமாக இருக்கிறேன்"

"முன்பு நீ செய்த பணிகளுக்கும், இப்போது செய்த பணிகளுக்கும் ஏதாவது வேறுபாடு உண்டா?"

"இல்லை!"

"அப்போது ஏன் மன அழுத்தத்துடன் இருந்தாய்? இப்போது எப்படி நிம்மதியாக இருக்கிறாய்?"

அரசனுக்குக் காரணம் சொல்லத் தெரியவில்லை.

ஞானியே தொடர்ந்தார். "அப்போது நீ, இது என்னுடையது என்று எண்ணினாய். இப்போது இது எனதில்லை. நான் இங்கு வெறும் பிரதிநிதிதான் என்று எண்ணுகிறாய். அந்த மனம்தான், அனைத்திற்கும் அடிப்படையே. நான் என்ற எண்ணம் வரும் போது, அத்தனை துயரங்களும் உன்னை சூழ்ந்துகொண்டு விடும்.

இந்த உலகம் எனதல்ல. இந்த உடல் எனதல்ல. எனக்கு அளிக்கப்பட்டது. இந்த உயிர் எனதல்ல. எனக்குக் கொடுக்கப்பட்டது என்று உணர்ந்தால்,



துன்பங்கள் அத்தனையும் ஓடிவிடும். இதே மனநிலையுடன், இந்த நாட்டை நீயே தொடர்ந்து ஆட்சி செய்!" என்று கூறி விடைபெற்றார், ஞானி.

இப்படித்தான் பலர், "நான்", "என்னால்" என்ற எண்ணத்தால், தங்களைத் தாங்களே சுமந்தபடி, திரிந்து கொண்டிருக்கின்றனர். இதனால் பாதிக்கப்படப் போவது மற்றவர்கள் அல்ல. அவர்கள் தான்.

நாம் இந்த பூமிக்கு, இறைவனால் அனுப்பப்பட்ட ஊழியன். கொடுக்கப்பட்ட வேலை முடிந்தவுடன், திரும்பவும் இறைவன் அழைத்துக் கொள்வான் என்ற எண்ணம், நமக்கு வேண்டும். இந்த இடைப்பட்ட நேரத்தில், நமக்கான சில கடமைகளை, இறைவன் நிர்ணயித்திருப்பான். முடிந்த வரை, நமக்கு கொடுக்கப்பட்ட கடமைகளை, நல்லபடியாக முடிக்க வேண்டும்.

நான், என்னால் என்ற எண்ணங்கள் தான், நம்முடைய அத்தனை பிரச்சனைகளுக்கும், துயரங்களுக்கும் காரணம். இந்த எண்ணங்களை, நம் மனதில் இருந்து தூக்கி எறிந்தால், இந்த பூமியில் நாம் வாழுகின்ற காலம் வரை, நிம்மதியாக வாழலாம்.

மனதில் நிம்மதி இருந்தால், நாம் செய்யும் முயற்சிகள் அத்தனையும் வெற்றியாகவே முடியும்.

நம் சந்தோஷங்களுக்கும் துக்கங்களுக்கும், அடுத்தவர்கள் காரணம் இல்லை. நாம் காரணம்.

பிரெஸ்னோ பசிபிக் பல்கலைக்கழகத்தில் ஒரு சொற்பொழிவாளர், கூட்டத்துக்கு, கணவருடன் வந்திருந்த ஒரு பெண்மணியை பார்த்துக் கேட்டார். "உங்கள் கணவர், உங்களை சந்தோஷமாக பார்த்துக் கொள்கிறாரா?"

அருகிலிருந்த கணவர், நிமிர்ந்து நம்பிக்கையுடன் அமர்ந்தார். காரணம், அவரது மனைவி அவரிடம், எந்த புகாரும் சொன்னதே இல்லை. அவர் சந்தோஷமாகவே இருந்தார்.

ஆனால், அந்த மனைவி தெளிவாக "இல்லை, என் கணவர் என்னை சந்தோஷமாக வைத்துக்கொள்ளவில்லை" என்றார். கணவர் அதிர்ந்தார். ஆனால், மனைவி தொடர்ந்தார்.

"என் கணவர் என்னை சந்தோஷமாக வைத்திருக்கவில்லை. என்னை சந்தோஷப்படுத்தியதும் இல்லை. ஆனால், நான் சந்தோஷமாக இருக்கிறேன். நான் சந்தோஷமாக இருப்பது என்பது அவரை சார்ந்தது இல்லை. என்னையே சார்ந்தது. நான் சந்தோஷமாக இருக்கிறேனா என்பது, நான் சம்பந்தப்பட்ட விஷயம்."



வாழ்வின் ஒவ்வொரு கட்டத்திலும் சந்தோஷமாக இருப்பது, என்பது என் முடிவு. அடுத்தவரால் நான் சந்தோஷமாக இருப்பேன் என்றால்,



இன்ன பொருளால் நான் சந்தோஷமாக இருப்பேன் என்றால், இன்னின்ன தருணங்களில் நான் சந்தோஷமாக இருப்பேனென்றால், நான் பெரும் பிரச்சனையில் இருக்கிறேன் என்று பொருள்.

நம்மைச் சுற்றியுள்ள எல்லாம், மாறிக்கொண்டே இருக்கின்றன. மனிதர்கள், செல்வங்கள், என் உடல், தட்பவெப்பம், என் முதலாளி, சந்தோஷங்கள், நண்பர்கள், எனது உடல் மற்றும் மன ஆரோக்கியம் எல்லாமே. இது ஒரு நீண்ட பட்டியல்.

என்ன ஆனாலும், சந்தோஷமாக இருப்பது என்பது, நான் எடுத்த முடிவு. நிறைய இருந்தாலோ, குறைவாக இருந்தாலோ என் சந்தோஷம் குறைவதில்லை. வெளியே சென்றாலோ, வீட்டில் இருந்தாலோ, ஏழையாக இருந்தாலோ, பணக்காரியாக இருந்தாலோ என் சந்தோஷம் குறைவதில்லை.

திருமணத்துக்கு முன்னும் சந்தோஷமாகத்தான் இருந்தேன், பின்னும் சந்தோஷமாகவே இருக்கிறேன். என்னைப் பற்றி எனக்கே சந்தோஷமாக இருப்பதால், சந்தோஷமாக இருக்கிறேன்.

என் வாழ்க்கையை, நான் விரும்பக் காரணம், என் வாழ்க்கை மற்றவர்களை விட, சுலபமானதாக இருப்பதால் அல்ல. நான் தனிப்பட்ட முறையில் சந்தோஷமாக இருப்பது என்று, தீர்மானித்திருப்பதால். நானே, என் சந்தோஷத்துக்கு பொறுப்பு.

இதை நான், ஒரு தீர்மானமாக மனதில் கொள்ளும்போது, என்னை சுமக்கும் பொறுப்பை மற்றவர்களிடமிருந்து நீக்குகிறேன். இது அனைவரது வாழ்க்கையையும் எளிதாக்குகிறது. அதனால் தான், எங்கள் திருமண வாழ்க்கை, இத்தனை ஆண்டுகளாக சந்தோஷமாக இருந்து வருகிறது" என்றார்.

கைதட்டல் ஓயவே இல்லை.

உங்கள் மனதில் இருக்கும் எண்ணங்கள் என்பது உங்களுக்கானது.... நீங்கள் தான், அந்த எண்ணங்களை உற்பத்தி



செய்கிறீர்கள். உங்கள் மனதில் இருந்து, உங்களால் வெளிப்படுத்தப்படும் எண்ணங்கள், ஏன் எதிர்மறையாக இருக்க வேண்டும்? ஏன் சந்தோஷமற்று இருக்க வேண்டும்? நம்மை சந்தோஷமாக வைத்துக்கொள்ளும் பொறுப்பை, நாம் ஏன் பிறரிடம் ஒப்படைக்க வேண்டும்?

மகிழ்ச்சி என்பது, நம் மனதில் உள்ளது. அதை யாரும் நமக்கு வந்து கொடுக்கப் போவதில்லை. எந்தவிதமான சூழ்நிலையிலும், நமக்கு நாமே ஏற்படுத்திக் கொள்வது தான் சந்தோஷம்.

மகிழ்ச்சி என்பது, மற்றவர்களிடம் இருந்து கடனாக பெறப்படும் ஒரு பொருள் அல்ல.

நீங்கள் மகிழ்ச்சியாக இருப்பதற்கும், அடுத்தவர்களுக்கும் சம்ப8ந்தம் இல்லை. நீங்கள் மகிழ்ச்சியாக இருப்பதற்கும், வெளியில் என்ன நடக்கிறது என்பதற்கும், சம்பந்தம் இல்லை.

வெளியுலகமும் வெளிப்புற சூழ்நிலைகளும் தான், உங்கள் உள்நிலை மகிழ்ச்சியைத் தீர்மானிக்கிறது என்றால், அது எவ்வளவு கேவலமான விஷயம்?

உங்களுடைய மகிழ்ச்சிக்கு, நீங்கள் மட்டுமே காரணமாக இருக்க வேண்டும். “ஏங்க, நான் கொஞ்ச நேரம் சந்தோஷமா இருந்துக்கட்டுமா?” என்று அடுத்தவர்களிடம் கேட்க முடியுமா? நம் சந்தோஷம் நம்மால் மட்டுமே கிடைக்கும்!

வெளியில் நடக்கும் விஷயங்கள், சம்பவங்களுக்கு ஏற்றபடி நம் மனது எண்ணங்களை உற்பத்தி செய்தால், உங்கள் மனது யாருடைய கட்டுப்பாட்டில் இருக்கிறது? உங்கள் மனதை இயக்குவது எது? யார்?

உங்கள் மனதை இயக்கும் பொறுப்பை, மற்றவர்களிடம் ஒப்படைக்காதீர்கள். யாரிடமும் விட்டுக் கொடுக்காதீர்கள். உங்கள் மனதில் இருந்து, உங்களால் வெளிப்படுத்தப்படும் எண்ணங்கள், சந்தோஷங்களையே உற்பத்தி செய்யட்டும். அதையே வெளிப்படுத்தட்டும். பிறகு பாருங்கள்.... உங்கள் வாழ்க்கையே மாறிப் போய்விடும். அழகாக ஆகி விடும். உற்சாகமாக மாறிப்போகும்.

நமது சந்தோஷம் நம்மிடம் இருக்கிறது. வெளியில் இல்லை.

நமது மனதுக்கு நாம் எதை, எவற்றை வழங்குகிறோமோ அதைத் தான் அது வெளிப்படுத்தும். வெளியில் உள்ள நல்லதை மட்டுமே கொடுத்தால், அதுவும் நல்லதையே, வெளிப்படுத்தும். கெட்டதை கொடுத்தால், கெட்டதை வெளிப்படுத்தும்.

ஒரு ஈயும், தேனீயும் ஒரு நாள் வழியில், சந்தித்துக் கொண்டன. ஈ, தேனீயிடம் கேட்டது, ‘‘நண்பா, சாப்பிட்டு விட்டாயா? தேனீ சொன்னது ,” இல்லை நண்பா , அதற்காகத் தான் பூக்களைத் தேடிப் பறந்து கொண்டிருக்கிறேன்”.

தேனீயின் பதிலைக் கேட்ட ஈ விழுந்து விழுந்து சிரித்தது .

“பூமி முழுக்க சுவையான உணவுகள் இறைந்து கிடக்க, நீ பூக்களைத் தேடி ஓடிக் கொண்டிருக்கிறாயே? உனக்குக் கண்களில் கோளாறா? இல்லை புத்தியில் கோளாறா....? அனுபவிக்க வேண்டிய இன்பங்கள் கண் முன்னே கொட்டிக் கிடக்க, அரிதான விஷயத்தைத் தேடி இவ்வளது தூரம் அலைந்து கஷ்டப்படுகிற உன்னைப் பைத்தியம் என்றுதான் சொல்ல வேண்டும்“ என்றது.

தேனீ கோபப்படவில்லை.

“உன் கண்களுக்கு இனிய உணவாகவும், இன்ப மயமாகவும் காட்சியளிக்கும் சகலமும் , எனக்கு நாற்றம் பிடித்தவையாகவும், அருவறுக்கத் தக்கவையாகவும் தோன்றுகிறது. நான் சேமித்து வைக்கும், என்னுடைய உணவு பல ஆண்டுகள் ஆனாலும், அதே சுவையோடு அப்படியே இருந்து பல பேருக்குப் பயன்படும்.

ஆனால் உன்னுடைய உணவு, கொஞ்ச நேரத்திலேயே அழுகிப் புழுத்து அழிந்து போகும். அத்துடன் உன்னுடைய கூட்டம் மட்டுமே அந்த நாற்றத்தைத் தேடிப் போகும்“ என்றது. ஈ அதற்கு மேல் ஒன்றும் பேசாமல் ஓடிப் போனது .

இந்த ஈயைப் போலவும், தேனீயைப்போலவும் தான், மனிதர்கள் இருக்கின்றனர். நீங்கள் எப்படி இருக்கிறீர்கள் என்பதை, நீங்கள் தான் முடிவு செய்ய வேண்டும்.

மீன் விற்கும் பெண்ணும், பூ விற்கும் பெண்ணும், நல்ல தோழிகள். ஒருநாள் இரவு, பூ விற்கும் பெண்ணின் வீட்டில், மீன் விற்கும் பெண் தங்க நேர்ந்தது.

மறுநாள் காலையில் ‘இரவு நன்கு தூங்கினாயா?’ எனப் பூ விற்கும் பெண், கேட்க, ‘அதை ஏன் கேக்குற போ. நேத்துப் பூரா எனக்குத் தூக்கமே வரலை’ என்று சொன்னாள் மீன் விற்கும் பெண்.

‘அப்படியா... ஏண்டி?’



‘உன் வீட்டில இருந்த பூவோட வாசம், என்னை என்னென்னமோ செய்துடுச்சு. நெடி தாங்கலை. அதனால, தூக்கம் வரலை’ என்று சொன்னாள், மீன் விற்கும் பெண்.



நம் மனது, பழக்கத்துக்கு அடிமையாகிப் போனது. ஆரம்பத்தில் இருந்து, எதை பழக்குகிறோமோ அதையே கெட்டியாக பிடித்துக் கொண்டு விடும். அது நல்ல விஷயமா, கெட்ட விஷயமா என்பதெல்லாம் அதற்கு தெரியாது. அதனால், அதற்கு நல்லதையே கொடுங்கள். பழக்கப்படுத்துங்கள்.

இரவு நேரம், வாகனம் ஓட்டும் டிரைவர்கள், தங்கள் அருகில் இருப்பவர்கள் தூங்கிக் கொண்டிருந்தால், அவர்களை தூங்க வேண்டாம் என்று சொல்லுவார்கள். அல்லது பின் பக்கம் போய் தூங்கச் சொல்வார்கள். இதற்கு, அவர்கள் சொல்லும் காரணம், “அவர் தூங்குவதைப் பார்த்தா எனக்கும் தூக்கம் வருது”.

நமக்கு அருகில் இருக்கும் மனிதர்களின் பழக்கம், நம்மையும் தொற்றிக் கொள்கிறது. அவர்கள் சந்தோஷமாக இருந்தால், அந்த சந்தோஷமும், அவர்கள் துக்கமாக இருந்தால் அவர்களின் துக்கமும், அவர்கள் சுறுசுறுப்பாக இருந்தால் அவர்களின் சுறுசுறுப்பும், அவர்கள் சோம்பேறிகளாக இருந்தால், அவர்களின் சோம்பேறித்தனமும் நமக்கும் தொற்றிக் கொள்கிறது.

நம் பக்கத்தில் இருப்பவர்களின் நடவடிக்கைகள், நமக்குள் தாக்கத்தை ஏற்படுத்துகிறது என்றால், நமக்குள்ளே இருக்கும் மனதின் தன்மை, நமக்கு எவ்வளவு வீரியமான தாக்கத்தை ஏற்படுத்தும்? அப்படிப்பட்ட மனதை, நாம் எவ்வளவு உற்சாகமாகவும், சந்தோஷமாகவும் வைத்திருக்க வேண்டும்?

“நான் சந்தோஷமாக இருப்பது என்பது, மற்றவர்களை சார்ந்தது இல்லை. என்னையே சார்ந்தது. நான் சந்தோஷமாக இருக்கிறேனா என்பது நான் சம்பந்தப்பட்ட விஷயம்“ என்று அந்த பெண்மணி சொன்னதை மீண்டும் ஒரு முறை படித்துப் பாருங்கள்! அப்படி இருக்க ஒரு முறையாவது உணர்ந்து பாருங்கள்!

சக மனிதர்களுடன், பழகும்போது அன்பாக பழகுங்கள். விட்டுக் கொடுத்துப் பழகுங்கள். உங்களுக்கும் மற்றவர்களுக்கும் உள்ள முரண்பாடுகளை சிரித்தபடியே கடந்து செல்லுங்கள். அவர்களுடன் நாம் சேர்ந்து இந்த பூமியில் பயணிக்கப்போவது மிகவும் குறுகிய காலமே.

எங்கேயோ, எப்போதோ படித்த ஒரு விஷயம், ஞாபகத்திற்கு வருகிறது.

இளம்பெண் ஒருவர், ஒரு பேருந்தில் பயணித்துக்கொண்டிருந்தார். அடுத்த நிறுத்தத்தில் பருமனான பெண் ஒருவர் பல பைகளுடன் அந்தப் பேருந்தில் ஏறி, அந்த இளம் வயது பெண்ணின் பக்கத்தில் அமர்ந்தார்.

அவரது பருத்த உடலும், பைகளும் அந்த இளம்பெண்ணை நெருக்கிக்கொண்டிருந்தன. அந்த இளம்பெண்ணின் அடுத்தப் பக்கத்தில் அமர்ந்திருந்த பயணி ஒருவருக்கு, இதனைப் பார்த்து கோபம் வந்துவிட்டது.

உடனே, அந்த இளம்பெண்ணிடம், “நீங்கள் ஏன் எதிர்ப்பு ஏதும் தெரிவிக்கவில்லை. பேசாமல் இருக்கிறீர்,” என ஆதங்கப்பட்டார்.

அந்த பெண் புன்னகையுடன் சொன்னார், “நாம் சேர்ந்து பயணிக்கப்போவது மிகக் குறுகிய நேரம்தான். எனவே, இந்த அற்பமானதொரு விஷயத்திற்காக, மரியாதை குறைவாகப் பேசுவதோ, வாதிடுவதோ தேவையற்றது. இன்னும் கொஞ்ச நேரத்தில் நான் இறங்கப்போகிறேன். அதுவரை இதை பொறுத்துக் கொள்வது, பெரிய விஷயம் இல்லை” என்றார்.

இங்கு, நாம் வாழப்போகும் காலம், மிகவும் குறைந்தது என்பதை உணர்ந்தால், தேவையற்ற சண்டை, வீண் விவாதம், எல்லாவற்றிலும் குற்றம் காணும் போக்கு, திருப்தியின்மை போன்றவற்றைத் தவிர்த்துவிடலாம்.

இந்த பூமியில், நமக்கு கொடுக்கப்பட்ட நேரம் மிகக் குறைவு. அந்த குறுகிய நேரத்தில், இதுபோன்ற தேவையற்ற பிரச்சனைகளில் நம் நேரத்தையும் சக்தியையும் வீணடிக்க வேண்டாம்.

யாராவது நம்மை புண்படுத்தினால், கடுஞ் சொற்களை பேசினால், துரோகம் செய்தால், அவமானப்படுத்தினால், ஏமாற்றினால்.... அமைதியாக இருங்கள்... நாம் பயணிக்கப் போவது ஒரு குறுகிய காலமே என்று நினைத்துக் கொள்ளுங்கள்.

இப்பயணம், எவ்வளவு காலம் நீடிக்கும் என்பது ஒருவருக்கும் தெரியாது. அவர்கள் இறங்க வேண்டிய இடம், எப்பொழுது என்பது யாருக்கும் தெரியாது. இன்றோ,



நாளையோ, அடுத்த வாரமோ, அடுத்த மாதமோ, அடுத்த வருடமோ, அடுத்த பத்து, இருபது வருடமோ... எப்போது வேண்டுமானாலும் இருக்கலாம்.

இருக்கும் வரை, உறவையும் நட்பையும் போற்றுவோம். ஒருவரை ஒருவர், மதித்து வாழ்வோம், ஒருவருக்கொருவர் அன்பு செலுத்துவோம், அடுத்தவர் தவறுகளை மன்னிப்போம்.. மறப்போம்.

ஏனெனில், நாம் சேர்ந்து பயணிக்கப்போவது ஒரு குறுகிய காலமே...

ஒரு அமெரிக்க சுற்றுலாப் பயணி தனக்கு விருப்பமான சூஃபி துறவியைச் சந்திக்கச் சென்றார். பல ஆண்டுகளாக, அவருடைய செய்திகளால் அவர் வசீகரிக்கப்பட்டிருந்தார். சூபி துறவியின் அறைக்குள் நுழைந்தார். அறைக்குள் நுழைந்த அவருக்கோ பெரும் வியப்பு.

அந்த அறை முற்றிலும் காலியாக இருந்தது! சூஃபி துறவி, அறையின் மூலையில் உட்கார்ந்திருந்தார். அங்கே அறைகலன்கள் எதுவும் இல்லை. ஒரு அமெரிக்கரால் நாற்காலிகள் இல்லாத அறையைக் கற்பனையே செய்ய இயலாது.

"இங்கே உட்கார்வதற்கு ஒரு அறைகலன்கூட இல்லையே?" என்றார், அமெரிக்கப் பயணி.

அந்த வயதான துறவி, சிரித்துக்கொண்டே, உன்னுடையது எங்கே? என்று கேட்டார்.

"நான் இங்கே பயணியாக அல்லவா வந்தேன். நான் எப்படி நாற்காலியை எடுத்துவர முடியும்" என்று கேட்டார்.

சூஃபி துறவி பதிலளித்தார். "நானும் இங்கே சில நாட்களுக்குப் பயணியாகவே வந்துள்ளேன். அதற்குப் பிறகு போய்விடுவேன். உன்னைப் போலவே" என்றார்.

இந்த உலகம் சிறந்த யாத்திரைத் தலம். அவ்வளவுதான். சொந்தம் கொண்டாடுவதற்குரிய இடம் அல்ல.....

இருக்கும் வரை, உங்கள் மனம் முழுவதுமாக ஆனந்தத்தால் நிரப்பி வையுங்கள். இருக்கும் வரை, சந்தோஷமாக இருங்கள்.

சந்தோஷமாக இருக்க காரணங்களே தேவையில்லை.

சந்தோஷமாக இருங்கள்... அவ்வளவு தான்...

●

# ஐந்தாவது உலகத் தமிழர் பொருளாதார மாநாடு

**ஐந்தாவது உலகத் தமிழர் பொருளாதார மாநாடு வரும் அக்டோபர் மாதம் 12ம் தேதி முதல் 14ம் தேதி வரையில் பாண்டிச்சேரியில் உள்ள சங்கமித்ரா மாநாட்டு அரங்கில் நடைபெற இருக்கிறது.**

இந்த மாநாட்டில் முக்கிய விருந்தினர்களாக கயானா நாட்டு பிரதம அமைச்சர் வீராசாமி நாகமுத்து, மொரிசியஸ் நாட்டு குடியரசுத் தலைவர் பரமசிவம் பிள்ளை வையாபுரி, பப்போகைனா நாட்டு ஆளுநர் சசிதரன் முத்துவேல், இலங்கை அமைச்சர் இராதாகிருஷ்ணன், தென் ஆப்பிரிக்கா அமைச்சர் ரவி பிள்ளை, பாண்டிச்சேரி ஆளுநர் கிரண்பேடி, பாண்டிச்சேரி முதலமைச்சர் வி.நாராயணசாமி, தமிழக அமைச்சர்கள் என ஏராளமானவர்கள் கலந்து கொள்கின்றனர்.

அமெரிக்கா உள்பட 30க்கும் மேற்பட்ட நாடுகளில் இருந்து தொழிலதிபர்கள், வணிகர்கள், வழக்கறிஞர்கள், டாக்டர்கள், பட்டயக் கணக்காளர்கள் மேலாண்மை அதிகாரிகள், வங்கி அதிகாரிகள் என பலரும் கலந்து கொள்கின்றனர்.

தொழிலதிபர்கள், வர்த்தகர்கள், விழை தொழில்புரிவோர், சுய வேலைவாய்ப்பில் ஈடுபடும் இளைஞர்கள், தொழில்துறையில் வெற்றிக்கொடியை நாட்டியவர்கள் சந்திப்புக்கு இந்த மாநாடு வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்கிறது.

வர்த்தகம் பெருக, முதலீடுகளை ஈர்க்கவும், பொருளாதார வளர்ச்சிக்காக விழை தொழிலை வகுத்தளிக்கவும் உலகளாவிய ஒத்துழைப்புக்கு ஒரு இணைப்புப் பாலத்தை ஏற்படுத்துவதை இம்மாநாடு குறிக்கோளாகக் கொண்டுள்ளது.

இம்மாநாட்டில் தொழில் முனைவோர் வர்த்தகத்துறையினர், தத்தம் தொழில் வளர்ச்சிக்காக வங்கிகள் நிதி நிறுவனங்கள், நிதியுதவி செய்வது, பெறுவது குறித்தும் விவாதிக்கப்படுகிறது.

உலக நாடுகளில் வசிக்கும் சிறப்பம்சம் பொருந்திய தமிழரை ஊக்குவிக்கும் வகையில் விருது வழங்கிச் சிறப்புச் செய்யப்படுகிறது.

இந்த மூன்று நாள் மாநாட்டில்,பெரிய, நடுத்தர, சிறு குறு தொழில் அதிபர்கள், இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு தங்களது உற்பத்திப் பொருட்களைக் காட்சிப்படுத்தும் வாய்ப்பு அவர்களுக்கு ஏற்படுத்தித் தரப்படும்.

இந்த மாநாட்டு செய்தியினை www.cconomicconference.in http://www.cconomicconference.in என்ற இணையதளத்தில் தெரிந்து கொள்ளலாம்.

●

# நிம்மதி எங்கே இருக்கிறது...?

**ஒரு மனிதன்.... எந்தக் குறையும் இல்லை அவனுக்கு... ஆனாலும் மனசில் நிம்மதி இல்லை. படுத்தால் தூக்கம் வரவில்லை... சிரமப்பட்டான்... அவன் மனைவி பரிதாபப்பட்டு ஒரு யோசனை சொன்னாள்.**

"பக்கத்துலே உள்ள காட்டுலே ஒர் ஆசிரமம் இருக்கு... அங்கே ஒரு பெரியவர் இருக்கார்... போய்ப் பாருங்கள்!" ஆசிரமத்துக்குப் போனான்... பெரியவரைப் பார்த்தான்.

"ஐயா.... மனசுலே நிம்மதி இல்லே... படுத்தா தூங்க முடியலே!" அவர் நிமிர்ந்து பார்த்தார்... "தம்பி... உன் நிலைமை எனக்குப் புரியுது... இப்படி வந்து உட்கார்!"

பிறகு அவர் சொன்னார்: "உன் மனசுக்குச் சில ரகசியங்கள் தெரியக்கூடாது... தெரிந்தா உன் நிம்மதி போயிடும்!"

"அது எப்படிங்க?"

"சொல்றேன்... அது மட்டுமல்ல... மனம் தேவையில்லாத சமயங்களிலே, தேவையில்லாத சுமைகளைச் சுமக்கறதும் இன்னொரு காரணம்!"

"ஐயா... நீங்க சொல்றது எனக்கு புரியலே!'

"புரியவைக்கிறேன்.... அதற்கு முன் ஆசரமத்தில் விருந்து சாப்பிடு." வயிறு நிறையச் சாப்பிட்டான்.

பெரியவர் அவனுக்கு சுகமான படுக்கையைக் காட்டி, "இதில் படுத்துக்கொள்" என்றார். படுத்துக் கொண்டான்... பெரியவர் பக்கத்தில் உட்கார்ந்து கதை சொல்ல ஆரம்பித்தார்...

கதை இதுதான்: ரயில் புறப்படப் போகிறது... அவசர அவசரமாக ஒருவன் ஓடி வந்து ஏறுகிறான்... அவன் தலையில் ஒரு மூட்டை... ஒர் இடம் பிடித்து உட்கார்ந்தான். ரயில் புறப்பட்டது... தலையில் சுமந்து வந்த மூட்டையை மட்டும் அவன் கிழே இறக்கி வைக்கவில்லை...

எதிரே இருந்தவர் கேட்கிறார்: "ஏம்ப்பா! எதுக்கு அந்த மூட்டையைச் சுமந்துக்கிட்டு வாறே? இறக்கி வையேன்!" அவன் சொல்கிறான்: "வேணாங்க! ரயில் என்னை மட்டும் சுமந்தா போதும்! என் சுமையை நான் சுமந்துக்குவேன்!' பெரியவர் கதையை முடித்தார்.

படுத்திருந்த நம்ம ஆசாமி சிரித்தான். "ஏன் சிரிக்கிறே?"

"பைத்தியக்காரனா இருக்கானே... ரயிலைவிட்டு இறங்கும் போது, மூட்டையைத் தூக்கிட்டு இறங்கினா போதாதா?" "

அது அவனுக்கு தெரியவில்லையே"

"யார் அவன்?"-இயல்பாக கேட்டான்



"நீதான்!"

"என்ன சொல்றீங்க?"

பெரியவர் சொன்னார்: "வாழ்க்கை என்பதும் ஒரு ரயில் பயணம் மாதிரிதான்... பயணம் பூராவும் சுமந்து கொண்டே போகிறவர்கள் நிம்மதியாக வாழமுடியாது. தேவைப்படுகிறது மட்டும் மனசில் வைத்துக்கொள்!"

அவனுக்கு தனது குறைமெல்லப் புரிய ஆரம்பித்தது... சுகமாக தூக்கம் வந்தது. தூங்க ஆரம்பித்து விட்டான்... கண் விழித்த போது எதிரே பெரியவர் நின்று கொண்டிருந்தார்.

"எழுந்திரு" என்றார். எழுந்தான்!

"அந்த தலையணையைத் தூக்கு!" என்றார்.

தூக்கினான்... அடுத்த கணம்"ஆ"வென்று அலறினான். தலையணையின் அடியில் ஒரு நாகப்பாம்பு, சுருண்டு படுத்திருந்தது.

"ஐயா! என்ன இது?"

"உன் தலைக்கு வெகு அருகில் ஒரு பாம்பு... அப்படி இருந்தும் நீ நிம்மதியாய் தூங்கி இருக்கிறாய்...!

அது ... அது எனக்குத்தெரியாது...

"பாம்பு பக்கத்தில் இருந்த ரகசியம் உன் மனசுக்குத் தெரியாது... அதனால் நிம்மதியாகத் தூங்கியிருக்கிறாய்!"

அவன் புறப்பட்டான்,, "நன்றி பெரியவரே... நான் போய் வருகிறேன்!"

"நிம்மதி எங்கே இருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டாயா?

"புரிந்து கொண்டேன்!" என் மனசுக்குள்ளேயே ஒளிந்து கொண்டிருக்கிறது. அறிவின் வெளிச்சத்தால் அதைக் தேடிக் கண்டுபிடித்து விட்டேன்...!"


RJ ARAVIND


RJ MAGESH


RJ HEMA


RJ KIRANYA


RJ DHIVYAA


RJ SHAKTHI


RJ PRABHU


RJ VIJI


RJ ANGAY


RJ JEYASHREE


RJ DINESH & RJ PRIYA

# 200,000

## LISTENERS & COUNTING!

---

## TUNE - IN TODAY!

---

### ACROSS 3 TIME ZONES: EST, CST & PST

**Available in**

**iOS & ANDROID**

**tamil.8kradio.com**

Facebook.com/8KRadioTamil @8KRadioTamil

8K Radio TAMIL
Miles Kammi, Smiles Jaasthi!

*Hema Shankar*
www.HemaShankar.com



INTERO
REAL ESTATE SERVICES.
*Independently Owned and Operated*



# Service that Shines Above the Rest

Specializing in working with first time home Buyers, Sellers, Investment properties and Short sales. Serving in Alameda, Contra Costa, Santa Clara County and San Joaquin County for 10+ years. Achievement Club Awards Winner from Bay East Association of Realtors since 2003.

## Buying

**Is it a buyer's or a seller's market right now?**
The answer can turn on a dime and not all buyers are up-to-date with the latest information on market conditions. It almost goes without saying that it can also have serious financial impact on your situation.

## Selling

I like to keep what I call the 3 P's at the top of my mind: **Passion, Professionalism and Perseverance**.
Because I love what I do, I treat my clients the way I would like to be treated myself. And I never give up. These 3 P's are the keys to the success of my clients, and they are also at the heart of my business.



**Hema Shankar**
REALTOR-ASSOCIATE®
**510.938.4727**
hemashan@yahoo.com
www.HemaShankar.com
CalBRE #01395758





INTERO *Prestigio*






LUXURY PORTFOLIO INTERNATIONAL®

LEADING REAL ESTATE COMPANIES® of THE WORLD